

# ஸப்தகிரி

மார்ச், 1987

விலை ரூ. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்




ஜிஹ்வே கீர்த்தய கேஸவம்
முராரிபும் சேதோ ,பஜ ஸ்ரீதரம்
பாணித்வந்த்வ ஸமர்ச்சயாச் யுதககதா:
ஸ்ரோத்ரத்வய த்வம் ஸ்ருணு |
க்ருஷ்ணம் லோகய லோசநத்வய ஹரே:
கச்சாங்க்ரி யுக்மாலயம்
ஜிக்ர க்ராண முகுந்த பாததுளஸீம்
மூர்தன் நமாதோக்ஷஜம் ||

(பொருள்) கேசியை ஸம்ஹரித்த கண்ணனை ஏ நாக்கே! நீ துதிப்பாயாக. ஏ நெஞ்சே! முராஸுரனை வதைத்த ஸ்ரீ கிருஷ்ணனை பஜிப்பாயாக. இரண்டு கைகளே! நீங்கள் ஸ்ரீமந் நாராயணனை அர்ச்சியுங்கள். ஏ காதுகளே! பக்தர்களை ஒரு போதும் கைவிடாத எம்பெருமானின் சரிதங்களைக் கேளுங்கள். ஏ கண்களே! பகவானைத் திருப்தியாய் சேவியுங்கள். ஏ கால்களே! ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் ஸந்நிதியை நோக்கிச் செல்லுங்கள். ஏ மூக்கே! நீ கண்ணபிரானின் பாதங்களில் அர்ச்சிக்கப்பட்டுள்ள துளஸீ தளத்தின் வாசனையை அனுபவிப்பாயாக. தலையே! நீ சர்வலோக சரண்யனை வணங்குவாயாக.

—முகுந்த மாலா-குலசேகராழ்வார்.

மார்ச், 1987

# ஸப்தகிரி

இதழ் 10 மலர் 17

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில்: நவக்கிரகங்களுடன், நவக்கிரக நாயகன் ஸ்ரீ வேங்கடேஸ்வரர்.
சித்திரம் — கி. ஜெகதீஷ்.

2-வது நாகலாபுரம் ஸ்ரீ வேத நாராயண சுவாமி திருக்கோயில்.

3-வது திருப்பதி ஸ்ரீ கோதண்டராமர் கோயில் பிரம்மோற்சவத்தில் கருடசேவை.

பின்னட்டையில்: திருமலையில் ரதசப்தமி அன்று சூரிய வாகனத்தில் திருவேங்கடவன் திருவுலா.

சிறப்பாசிரியர்
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு.
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

மனிதன் அழுகுரலுடன் இம்மண்ணில் அடியெடுத்து வைக்கின்றான். பின்னர் குறைகளோடும் குறை, கூறிக் கொண்டும் வாழ்கின்றான். இறுதியில் ஏமாற்றங்களுடன் தன் வாழ்க்கைப் பயணத்தை முடித்துக் கொள்கின்றான். இதுதான் ஒரு சராசரி மனிதனின் முடியும் கதை. இக்கதை சிறுகதையாகவோ, தொடர்கதையாகவோ, நாவலாகவோ ஏன் இதிஹாஸமாகவோ திகழ்வது அவனது வாழ்க்கைப் பயணத்தின் சீர்மையைப் பொறுத்தே அமையும். வாழ்க்கையில் எந்தக் கட்டத்தில் இச்சீர்மையை அவன் பெறுகின்றான், எவ்வாறு பெறுகின்றான் என்ற கேள்விகளுக்குப் பதில் அறிதல் அவசியம். சுய சிந்தனையாலும், வெளி அனுபவத்தாலும் தன் வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்ள ஒரு சராசரி மனிதனுக்கு 'இத்துணை காலம் அவசியம்' என்று ஒன்று தேவைப்படுகிறது. அக்காலம்தான் அம்மனிதனின் வாழ்க்கையாக அமைகின்றது. அக்காலம்தான் அறுபது ஆண்டுகள். அறுபது ஆண்டுகளுக்குள் ஒருவன் பெற முடியாத கல்வி அறிவையும், அனுபவ முதிர்ச்சியினையும், அக்காலத்திற்கு பிறகு அவனால் பெற முடியாது; பெற்றாலும் அவை பிறருக்கு எந்த அளவில் பயன்படும் என்பது ஒரு கேள்விக்குறியே! அதனால்தான் அறுபது ஆண்டுகள் வாழ்ந்த ஒருவனுக்கு மணிவிழா கொண்டாடப்பட்டு, அவன் முழு வாழ்வு வாழ்ந்ததாகப் பாராட்டப்பட்டு, வாழ்த்தப் பெற்று, மதிக்கவும் படுகின்றான். அறுபது ஆண்டுகள் கழிந்து, அதற்கு அடுத்த ஆண்டில் அடியெடுத்து வைக்கும் ஒவ்வொருவருக்கும் அது அவனது அடுத்தப் பிறவியின் தொடக்கமாக அமைந்துவிடுகின்றது. இக்காலக்கணக்கானது, நமது முன்னோர் முன்பே வகுத்த வாழ்க்கைக் கணக்காகும். அறுபது ஆண்டுகளைத் தன் ஒரு வயதாகக் கொண்டு விளங்கும் காலதேவன் அடுத்த மாதம் முதல் கொண்டு தனது மற்றுமொரு புத்தாண்டிற்குள் அடியெடுத்து வைக்கின்றான். ஆம், அக்ஷயம் முடிந்து பிரபவம் ஆரம்பமாகவுள்ளது. காலச் சக்கரம் மற்றுமொரு சுற்றில் அடியெடுத்து வைக்க ஆயத்தமாகவுள்ளது. பிரபவத்தில் பிறந்து மற்றுமொரு பிரபவத்தில் அடியெடுத்து வைத்துள்ள ஆன்றோர்களின்—சான்றோர்களின் கடந்த கால அனுபவத்தினை ஒரு புதையலாகக் கொண்டு, நாளைய நிச்சயமில்லா எதிர்கால வாழ்க்கையினை எதிர்கொள்ள, இன்றைய நம் நிகழ்கால வாழ்க்கையினைச் செம்மையுறச் செய்துகொள்ள வேண்டுமென்று நம்மை அறிவுறுத்தவே-நினைவுறுத்தவே காலதேவன் மற்றொரு முறை தன் சக்கரத்தைச் சுழற்ற ஆரம்பித்துள்ளான்.

ஆண்டுகளின் பெயர்களின் மூலமாகவே நம்மை எச்சரித்த ஆன்றோர்களின் அனுபவ அறிவானது நமக்கு உதவிடும் வழிகாட்டியாகும். இவ்வகையில்தான் கடந்த சென்ற அக்ஷயமென்றும் க்ஷயமென்றும் அழைக்கப் பெற்ற அவ்வாண்டு திகழ்ந்தது என்றே கூற வேண்டும். அவ்ஆண்டு விட்டுச் சென்ற அடையாளங்கள், நமது எதிர்கால வாழ்க்கைக்குத் தேவையான எச்சரிக்கை அறிகுறிகள். இந்தியா மட்டுமன்றி, உலகளவில், மறைமுகமாக நடைபெற்று வந்த சமய, இன, மொழி வேறுபாடுகள் இன்று நேரிடையாகவே, நாளெல்லாம் சென்ற ஆண்டில் நடைபெற, அதனால் விளைந்த கலவரங்களும், அழிவுகளும் கலியின் கொடுமையினைக் கோடிட்டுக் காட்டின. இந்தக் கசப்பான, வெறுக்கத்தகுந்த, தவிர்க்கக்கூடிய நிலைமாறி, வாழ்க்கையில் நம்பிக்கையூட்டும் வகையில் பிரபவம் ஆரம்பமாகவுள்ளது. அழிவிலிருந்து நம்மைக் காப்பாற்றி, ஆக்க வழியில் நம்மை வழி செலுத்தவே இப்புத்தாண்டு பிறந்துள்ளது என்றே நம்புவோம்.

நம்பிக்கை மிகு இந்த ஆண்டில்தான் அச்சூரியனும் தோன்றினான். ஆகாயத்திலிருந்து காற்றும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து இம்மண்ணும் தோன்றியதாகக் கூறப்படுகிறது. இவற்றில் நம் கண்ணில் தெரியும்—இப்பூமியில் உயிர்கள் தழைத்தோங்கிடச் செய்யும்-அப்பகலவனே நமது கண் கண்ட தெய்வமாகும். கோள்களின் நாயகனும் அப்பகலவன் தோன்றிய இப்புத்தாண்டு ஆக்கப் பூர்வமான தனித்தன்மைகளுடன் விளங்கும் என்றே கொள்ளல் வேண்டும். உயிரின் ஆத்மாவாக இச்சூரியன் திகழ்கின்றான். அவனில்லாவிடில், உயிரும் உடலும் இல்லை. இறைவனின் பிரதிநிதிகளான ஒன்பது கோள்களும் நம்முடலின் ஒவ்வொரு அணுவிலும் பரவியிருக்கின்றன. இவைகளின் சலனங்களாலேயே நம்முள்ளேயும் வெளியேயும் வினைகள் நடைபெறுகின்றன. கோள்களின் நிலைபற்றியும், அவற்றின் வலிமை பற்றியும் நமது கலாசார இலக்கியங்களான வானூலும், கணித வியலும், ஜோதிடக்கலையும், யோக சாஸ்திரமும் பலவாறு விளக்கிக் கூறுகின்றன. சூரியனைத் தலைவனாகக் கொண்டு விளங்கும் இக்கோள்களை வணங்குவதாலேயே பரமாத்மாவை கண்டிடலாம் என்று ஜ்யோதிஷார்ணவம் கூறுகிறது. இந்த ஒன்பது கோள்களைக் கொண்டு அப்பரம்பொருளானவன் நமது கர்ம வினைக்கேற்ப நமது வாழ்க்கையில் ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்துகின்றான்.

இவ்வகையில் எதிர்வரும், கோள்களின் நாயகனும் அப்பரிதியான் பிறந்த பிரபவ ஆண்டு, தனக்கே உரிய சிறப்புடன், நன்மைகளின் பிறப்பிடமாக விளங்கும் என்றே எதிர்பார்க்கப்படுகிறது. இன வேறுபாடின்றி, சமய பாகுபாடின்றி, மொழி பேதமின்றி, நிறவெறியின்றி, வேற்றுமையில் ஒற்றுமை தோற்றுவிக்கும் வகையில், ஆரோக்யமான ஒரு மனித வாழ்க்கைக்கு உறுதி அளிக்கும் வகையில், ஆக்கப்பூர்வமான—அறிவுப் பூர்வமான ஓர் உன்னத வாழ்க்கைக்கு இப்பிரபவ ஆண்டு நம்மை இட்டுச் செல்ல, கோள்கள் அதற்கு உதவிட, கோள்களின் தலைவனும் அச்சூரிய பகவானின் ஆத்மாவான அவ்வேங்கடவனின் திருவருள் என்றென்றும் எவ்வுயிர்க்கும் கிடைப்பதாகுக.

# செய்திச் சுருக்கம்

**புதிய விசாரணை அலுவலகங்கள் :**

திருமலைக்கு வரும் யாத்திரிகர்கள் பயனுறும் வகையில், திருமலையில் கல்யாணகட்டாவுக்கு (தலைமுடி மழிப்பிடம்) அருகிலும், வைகுண்டம் 'க்யூ' கட்டிடத் தொகுதியிலும், அன்னதான கட்டிடத்திலும் தி. தி. தேவஸ்தான விசாரணை அலுவலகங்களை, அண்மையில் தி. தி. தே. இணை செயலாட்சித்தலைவர் திரு. வை. சக்ரதாரராவ் அவர்கள் திறந்து வைத்தார்.

**அடிக்கல் நாட்டு விழா :**

ஆந்திர மாநிலத்தில் எல்லா மாவட்ட தலைநகரங்களிலும் தி. தி. தேவஸ்தானம் திருமண மண்டபங்களைக் கட்டுவதென்று எடுத்த முடிவின்படி, அண்மையில் சித்தூரில் ரூ. 30 இலட்சம் செலவில் கட்டப்படவிருக்கும் திருமண மண்டபம் ஒன்றிற்கு தி. தி. தே. பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் அடிக்கல் நாட்டினார். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் அவர் பேசியபோது, விரைவில் மதனபல்லி, பீலேரு மற்றும் சென்னையில் விரைவில் திருமண மண்டபங்கள் கட்டப்படும் என்று தம்முரையில் குறிப்பிட்டார்.

**பார்வையற்றோர் இல்லம் :**

திருப்பதியில் ரூ. 4.5 இலட்சம் செலவில் பார்வையற்றோர்களுக்கென இல்லம் ஒன்று விரைவில் கட்டப்படும்.

**வெள்ளி விழா :**

30-1-87 அன்று திருப்பதியில் 'ஸம்ஸ்க்ருத வித்யா பீடத்தின்' வெள்ளி விழா நிகழ்ச்சிகளை இந்திய மத்திய அரசு மக்கள் மேம்பாட்டு அமைச்சர் திரு. பி. வி. நரசிம்மராவ் அவர்கள் துவக்கி வைத்தார். 1962-இல் 2 ஆசிரியர்களுடனும், 30 மாணவர்களுடனும் துவக்கப்பட்ட இப்பீடம் தற்போது 19 ஆசிரியர்களையும் 192 மாணவர்களையும் கொண்டு, தனக்கென ஒரு கட்டிடத்துடனும் விளங்குகின்றது. இத்தகு பெருமைமிகு வித்யாபீடத்தின் வெள்ளி விழாவை துவக்கி வைத்த அமைச்சரவர்கள் ரூ. 23 இலட்சம் செலவில் கட்டப்பட்ட வெள்ளி விழா கட்டிடம் ஒன்றினையும் திறந்து வைத்தார். பின்னர் 'வேத சம்மேளன்' ஒன்றினையும் துவக்கி வைத்து, இப்பீடத்தில் எதிர்காலத்தில் வேத அறிவினையும், விஞ்ஞான அறிவினையும் இணைக்கும் வகையில் கல்வித்தரம் இருத்தல் வேண்டும் என்று குறிப்பிட்டு, அன்று நடைபெற்ற பட்டமளிப்பு விழாவில் 100 மாணவர்களுக்குப் பட்டங்கள் அளித்தார். அதனைத் தொடர்ந்து, இவ்வித்யா பீடத்தின் ஸ்தாபகர்—இயக்குநரான டாக்டர் பி. ஆர். சர்மா நினைவு தொகுப்பு ஒன்றினை வெளியிட்டார்.

**பாராட்டு :**

திருப்பதியில் உள்ள தி. தி. தேவஸ்தான யோகா நிறுவனத்தின் முதல்வர் திருமதி. எஸ். ஆர். ஜி. ராஜ்யலக்ஷ்மி தேவி அவர்கள் இந்திய ஜனாதிபதி திரு. ஜயல்சிங் அவர்களால் 30-1-87 அன்று "யோக சிரோமணி" எனும் பட்டம் அளிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டார். இந்நிறுவனம் எதிர்காலத்தில் ஒருதேசிய யோகா நிறுவனமாக செயற்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

**திருமலையில் பிரமுகர்கள் :**

அண்மையில் திருமலைக்கு இலங்கை வேளாண்மைத்துறை அமைச்சர், திரு. ஜெய்சூர்யா அவர்களும், இந்திய மத்திய அமைச்சர் திரு. கே. கே. திவாரி அவர்கள் தம் குடும்பத்தாருடனும் வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தனர்.

**கூட்டுறவு வங்கி :**

திருமலையில் பணிபுரியும் சுமார் 4,000 தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் பயனுறும் வகையில் திருமலையில் தி. தி. தே. ஊழியர்கள் கூட்டுறவு வங்கி ஒன்று தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்களால் சங்குமிட்டா காட்டேஜில் திறந்து வைக்கப்பட்டது.

**புதிய குடில்கள் :**

திருமலையில் யாத்திரிகர்கள் பயனடையும் வகையில் ஆழ்வார் ஏரியில் 40 குடில்களும், ராம்பகிச்சாவில் 150 குடில்களும், மாதவ நகரில் 27 குடில்களும் புதிதாகக் கட்டப்பட்டு, அவை தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

**மற்றைய செய்திகள் :**

திருப்பதியில் இருக்கும் திருமலை மலை அடிவாரமான "அலிபிரியில்" ரூ. 4 கோடி செலவில் 'தங்கு மையம்" ஒன்று விரைவில் கட்டப்படும். இத்தங்கு மையம், திருமலைக்கு வரும் யாத்திரிகர்களுக்கு உதவிடும் வகையில் தங்கு வசதிகள், உணவு விடுதி, தகவலறிவிப்பு நிலையம் ஆகியன கொண்டு விளங்கும். திருமலையில் ரூ. 1.6 கோடி செலவில் மேலும் 100 குடில்கள் கட்டப்படும்.

ஃ ஃ ஃ

ஏற்கெனவே மங்காபுரத்திலிருந்து திருப்பதி வரை அமைக்கப்பட்டுள்ள குடி நீர் குழாய் வசதியினைப் பயன்படுத்திக் கொண்டு, கல்யாணி குடிநீர் அணைக்கட்டிலிருந்து மங்காபுரத்திற்கு அதாவது 7 கி. மீட்டர் தொலைவு கொண்ட மேலும் ஒரு குடிநீர் குழாய் வசதியினை மேற்கொண்டு, திருப்பதி வாழ் மற்றும் திருப்பதியில் தங்கும் யாத்திரிகர்கள் பயனுறும் வகையில் நாள் ஒன்றிற்கு 45 இலட்சம் காலன் குடிநீர் வழங்கிட திட்டம் ஒன்று மேற்கொள்ளப்பட உள்ளது. மேலும் திருமலையில் பாபநாசம் அணைக்கட்டிலிருந்து திருமலை நீர் பங்கிட்டு மையம் வரை ரூ. 60 இலட்சம் செலவில் குடிநீர் குழாய் வசதி மேற்கொள்ளப்படும்.

ஃ ஃ ஃ

திருமலையில் கல்யாண கட்டா மற்றும் 'க்யூ' கட்டிடத் தொகுதிக்கு அருகே உள்ள ஆழ்வார் ஏரி குடில்கள் நுழைவு வாசலில் இரண்டு கல் வளையங்கள் நிறுவப்படும்.



# ஆதிகவி ஸ்ரீ வால்மீகியின் ரஸாதிப்பிரத்யக்ஷம்!

"ஸப்த ப்ரம்ம 'ஸ்வரூபங்களான ஸத் க்ரந்தங்களே விளக்கொளிகள். இவ்வுலகம் இருள் மூடிப்போய்விடாமல் அதைக் காப்பது "சப்தம்" என்கிற ஜோதியே' என்று தண்டி என்னும் அணியாசிரியர் கூறுகிறார். மேலும், கண்ணிருந்தும் குருடர்களே ஆன இம்மனிதருக்கு குணதோஷங்களை உள்ளபடி கண்டு உணரும் பகுத்தறிவைத் தருவதற்காக ஸ்ரீ வால்மீகி போன்ற பூர்வ - ஸூரிகள் கருணை புரிந்து வாக்குக்களின் அதிவிசித்ர மான போக்குக்களை எடுத்துக்காட்டிப் பேருதவி புரிந்தார்கள் என்றும் கூறியிருக்கிறார்.

எல்லாம் போய்விடினும், இவ் இந்தியாவின் எல்லாவித முற்போக்குச் சரித்திரத்திற்கு ஸ்ரீ வால்மீகி, வ்யாஸர், காளிதாஸர் இம்மூவரே போதுமென்றார் ஸ்ரீ அரவிந்த கோஷ். இதை எல்லாம் எண்ணி இக் கட்டுரையில் ஸ்ரீ வால்மீகி பகவான் கவிதையை அடைந்த விஷயமாய்ச் சில வார்த்தைகளைச் சொல்வதற்குத் துணிகிறேன். அதற்குத் தெய்வ அருள் கிட்டட்டும்!

மூவகைக் கவிகள் :

ரிஷி கவி, அநுக்ரஹ கவி, அப்யாசக்கவி என்று கவிகளை மூன்றாக வகுக்கலாம். தங்கள் நியமாதிசயத்தால் உண்டாகும் வன்மையால், தங்களைத் தேடிக் கொண்டு வந்ததைப் போல் உள்ள வாக்விலாஸத்தைப் படைத்த வ்யாஸ, வால்மீகி போன்றவர்கள் ரிஷி கவிகள்.

தேவதா அனுக்ரஹ விசேஷத்தால் கவனம் செய்யும் ஸாமர்த்தியத்தை அடைந்த காளிதாஸர் போன்றோர் அனுக்ரஹ கவிகள்; "குருகுலக் லிஷ்டோ முராரி: கவி:"; என்றபடி குருகுலவாசம் செய்து, யாப்பிலக்கணம், அணியிலக்கணம் முதலியவைகளை நன்கு பயின்று கவி பாடுவதில் தேர்ச்சியடைந்த முராரி போன்றோர் அப்யாசக் கவிகள்.

ரிஷி கவியான ஸ்ரீ வால்மீகி பகவானைக் கவிதை தானாகத் தேடி அடைந்த வரலாறு இராமாயணத்தில் முதல் நான்கு ஸர்க்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

முக்யமான காவ்யாம்சங்கள் :

ஒரு காவ்யத்திற்கு முக்யமான அம்சங்கள் மூன்று. வடமொழியில் அவற்றை வஸ்து அதாவது கதை வரலாறு, நேதா அதாவது தலைவன், ரஸம் அதாவது ச்ருங்காரம் முதலிய சுவைகள் என்று குறிப்பிடுவார்கள்.

நாரதர், எதிர்பாராமல் வால்மீகி ஆச்ரமத்தில் ப்ரஸன்னராகி இராமாயணக் கதையைச் சொல்லிப் போனது, வஸ்து ப்ராப்தியை நன்கு உணர்த்துகிறது. அதிலேயே அந்தந்தக் கலியாண குணங்கள் கூடப் பெற்ற தலைவன் வர்ணனையும் அடங்கி இருக்கிறது எனலாம்.

ஆனால், ரஸங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் ஸ்ரீ வால்மீகி பகவானுக்குத் தங்கள் ஸ்வரூபத்தைக் காட்டிச் சென்றதுதான் அவர் ரிஷிகவியாய் ஏற்பட்டதன் பேரதிசயத்தைத் தெரிவிக்கின்றதாகும்; அதைச் சற்று விளக்கிக் கூறுவோம்.

ரஸங்களின் இலக்கணம் :

ரஸங்கள் பொதுவாக "சாந்தம், ச்ருங்காரம், ரௌத்ரம், பீபத்ஸம், கருவம், பயானகம், அத்புதம், ஹாஸ்யம், வீரம்" என்று ஒன்பதாக வகுக்கப்பட்டிருக்கின்றன.

'சாந்தம்' என்பது பற்றுப்பகையற்ற மனத்தின் மாசற்ற தன்மையையும், அமைதியையும், அழகையும் குறிக்கின்றது. "ச்ருங்காரம்" என்பது ஸ்த்ரீ புமான்கள் மன ஒற்றுமையுடன் சேர்ந்து ஸுகித்திருப்பதைச் சொல்லுவதாகும். கொடிய செயலை நாடி நிற்பதே 'ரௌத்ரம்'. 'பீபத்ஸம்' என்பது அருவருப்பான காட்சிகளைக் காண்பதால் உண்டாகும் ஒருவித உணர்ச்சிக்குப் பெயர். இஷ்டர்களை இழப்பது முதலியவைகளால் விளையும் துக்கானுபவத்தைக் கருண ரஸம் என்பார்கள்.

பயப்படுகைக்குப் 'பயானகம்' என்று பெயர். 'அற்புதம்' என்பது ஆச்சர்யம் அடைதல்; சிரிப்பைத் தருவது ஹாஸ்யம். உத்ஸாகத்தைப் பொறுத்து உண்டாகும் செயல்கள் வீர ரஸப் பிரதானங்கள் என்று கொள்ளப்படுகின்றன.

---

சன்மிஷ்டை

---

சாந்த ரஸ ப்ரத்யக்ஷம் :

ஸ்ரீ வால்மீகி பகவான் ஸ்ரீ நாரதரைக் கண்டு, ப்ரச்னம் ஒன்று செய்து, ஸ்ரீ இராம சரிதத்தைச் சுருக்கமாக அவர் அப்பகவானுக்கு உபதேசித்துச் சென்ற பின், தம் சிஷ்யரான பரத்வாஜருடன் நீராடுவதற்காகத் 'தமஸை' என்ற ஆற்றங்கரை போய்ச் சேர்ந்தார். அதன் தீர்த்த ஜலத்தைக் கண்ணுற்றார்.

மாசு மருவற்று வெகு நேர்த்தியாகவும், தெளிவாகவும் அது இருப்பதைக் கண்டு உள்ளங்கனிந்து ஸ்ரீ வால்மீகி தம் சிஷ்யரைப் பார்த்துச் சொல்லியதாவது:

'பார்த்தாயா, பரத்வாஜா, ஸத்புருஷர்களுடைய மனம் போல் இந்தத் தமஸை தீர்த்தம் ப்ரகாசிப்பதை! என்ன சேறற்றத் தன்மை! என்ன அழகு! என்ன தெளிவு!' இப்படி அவர் வர்ணித்ததானது, சாந்த ரஸமே தீர்த்த ரூபமாக ஸ்ரீ வால்மீகிக்குத் தன் குணாதிசயங்களைக் காட்டியது என்றால் மிகையாகாது.

ஸத் புருஷர்களுடைய மனத்திற்கு அந்தத் தீர்த்தத்தை ஒப்பிட்டுக் கூறியதே சாந்த ரஸத்தின் ப்ரத்யக்ஷத்தை ஸ்ரீ வால்மீகி பகவான் அடைந்ததற்குப் போதுமான அத்தாக்ஷி.

பறவை வடிவெடுத்த ச்ருங்காரம் :

அடுத்து வந்து தோன்றியது ச்ருங்கார ரஸம். ஆனால், ச்ருங்காரத்தைக் கண்டால் மகர்ஷிகளுக்குப் பயம். அப்படி அவர்கள் பயப்படுவதே அந்த ரஸம் அவர்களைக் கண்டு நடுங்குவதற்கு ஹேதுவாகிறது.

'பயம் பீதாத்ஹி ஜாயதே' என்பாள் மந்தரை என்னும் கூனக்கிழவியும். ஆதலின் அந்த ரஸம், மஹர்ஷியைப் பயமற்றுக் காணவும், மஹர்ஷி சங்கையின்றி அதனை ஆதரித்து அதன் ப்ரத்யக்ஷத்தை நோக்கவும் உபாயம் ஒன்றைச் செய்தது. ஜீவாத்ம பரமாத்மாக்களை ஒன்றோடொன்று இணை பிரியாத பக்ஷிகளாக உபநிஷத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறதல்லவா?

அதை எண்ணி அவர் மன மகிழ்ந்து தம்மைப் பார்க்குமாறு இரண்டு க்ரௌஞ்ச பக்ஷிவேடம் தரித்து ஒன்றோடொன்று ஸல்லாபித்துக் கொண்டு ச்ருங்கார ரஸம், அம்மஹர்ஷியின் ஸமீபத்தில் கூச்சமின்றி நடமாடத் தொடங்கியது. அவரும் அதைக் கண்டு மிகவும் ஆனந்திக்கலானார்.

ரௌத்ராதிகளின் வரவு :

உடனே ரௌத்ர ரஸம் அவர் எதிர் வந்து காட்சி கொடுக்க ஆரம்பிக்க, அவ்விரட்டையர்களில் ஆண் பக்ஷியை அகாரணமாய் ஒரு வேடன் அம்பெய்து அடித்து வீழ்த்தினான். அதிலிருந்து புறப்பட்டது பீபத்ஸ ரஸம். அடிபட்ட பக்ஷி உதிரம் ததும்ப உயிர் துடித்துப் புரளுவதைக் கண்ணுறலாயிற்று, ஸ்ரீவால்மீகி பகவானுக்கு.

'மாநிஷாத' ச்லோகாவதாரம் :

பெண் பக்ஷி, உயிர் துடிக்கும் அவ்வாண் பக்ஷியைப் பார்த்துக் கதற ஆரம்பித்தது. அதை அவலம்பமாகக் கொண்டு, ஸ்ரீ இராமாயணத்தின் முக்ய ரஸம் என்று கருதப்படுகிற கருண ரஸம் அம்மஹர்ஷியின் மனத்துள்ளே தோன்றி அதை மிக்க இளகச் செய்தது.

நாதரூபமாக ஒரு புதுமையும் புறப்படலாயிற்று. அதுதான் 'அத்புதம்' என்ற ரஸங்களில் மிக்க மஹிமை பெற்றதான ரஸம். அடி ஒன்றுக்கு எட்டு எழுத்துக்கள் அடங்கப் பெற்

றதுமான நான்கு பாதங்கள் உடையதும், வீணைத் தந்திகளின் லயத்திற்கு ஒற்றுமை பெற்ற ஸ்வர ஸம்பத்தை உடையதுமான ஸ்லோகம் ஒன்று ஸ்ரீ வால்மீகி மஹர்ஷியின் வதனாரவிந்தத்திலிருந்து கம்பீரமாய் ஒலித்துக் கொண்டு அவர் அறியாமலே வெளி வந்தது.

'மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வம் அகம: சாச்வதீ: ஸமா: | யத் க்ரௌஞ்சமிது நாத் ஏகம் அவதீ:காம மோஹிதம்' (அதாவது - மையலால் மயக்கமுற்ற க்ரௌஞ்சப் பறவைகளின் ஜோடியில் ஒன்றை ஹிம்ஸித்தனை அல்லவா? ஏ வேடுவனே, ஆதலால் நீ நீடித்த ஆண்டுகள் வாழ்வு பெற்றிருக்கமாட்டாய் என்பது கருத்தாகும்.)

'பிரஹ்மாநுக்ரஹம்'

இவ்வாறு தம் வாக்கிலிருந்து புறப்பட்ட கவிதையைக் கண்டு அம் மஹர்ஷியே மிக்க வியப்படைந்தார். 'க்ரௌஞ்ச பக்ஷி அடிபட்டதைக் கண்டு என் உள்ளத்தில் தோன்றிய சோகமல்லவா இப்படி ச்லோகமாக மாறி வந்திருக்கிறது!' என்று எண்ணினார். அதைத் தாமும் பல தடவை பாடினார்; சிஷ்யனையும் அவ்வாறு பாடச் சொன்னார்.

'ஏன் இப்படி இன்றைக்கு இப் புதுமை நேர்ந்தது?' என்று ஆலோசனையால் மனக்கலக்கத்தையும் அடைந்தார். சோகம் ஒரு புறம் இழுக்க மற்றோர் புறம் ஸ்லோகம் இழுக்க இவர் மனம் ஊசலாட ஆரம்பித்தது. வரப்போவதை அறியாமல், அதற்குப் பூர்வாங்கமாக ஏற்பட்ட ஸம்பவத்தால் மனத் தத்தளிப்பை அடைந்திருக்கும் ரிஷியைக் கண்ட, ப்ரமதேவனுக்குத் தன் நகைப்பை அடக்க முடியவில்லை.

அவர் அம்மஹர்ஷிக்கு நேராகவே தோன்றி நான்கு முகங்களிலும் 'ஹாஸ்ய ரஸம்' நடனம் புரிய, புதிரை அவிழ்க்கலானார். 'மஹர்ஷியே! உன்னிடம் உள்ள ச்ருஷ்டி

அறிவை உம்பால் வரச் செய்திருக்கிறேன். ஆனால், நீர் ச்ருஷ்டிக்கப் போவது என்னால் ஆக்கப்பட்ட இவ்வுலக வஸ்துக்களைப்போல் தோன்றித் தோன்றி அழிவன அல்ல!

எது வரையில் பர்வதங்கள் இவ்வுலகில் நிற்கின்றனவோ, நதிகள் பெருக்கடைகின்றனவோ, அதுவரை உம்மால் ச்ருஷ்டிக்கப் போகும் இராமாயணக் கதை நிலை பெற்று உலகெங்கும் ப்ரவஹித்து அதைச் செழிக்கச் செய்யும். நான் போகும்படி சொல்லியேதான் 'மாநிஷாத' என்னும் அஹிம்ஸா ஸரஸ்வதி உம்முடைய வாக்கில் அவதாரத்தை அடைந்திருக்கிறாள்.

அந்த அஹிம்ஸா தர்மமே உலகெங்கும் மேம்பாடு அடையுமாறு, இராம வ்ருத்தாந்தம் அனைத்தையும் நீர் அறிந்து பாடி ஓர் மஹோபகாரத்தை, இவ்வறியாத் தன்மை பெற்று, ஒருவரை ஒருவர் வருத்திக் கொண்டிருக்கும் மனிதர்களுக்குச் செய்வீராக!' என்று அனுக்ரஹித்து நான்முகக் கடவுளும் அங்கிருந்து மறைந்தார்.

ஸ்ரீஇராமாயணவதாரம் :

அக்கடவுள் அகன்றபின், ஸ்ரீ வால்மீகி பகவானுக்கு இதுவரை உணரப்படாமல் உள்ளே தூங்கிக் கிடந்த தர்ம வீர்யம் தலையெடுக்க, ஓர் உத்ஸாகாதிசயம் உண்டாயிற்று. அதன் மஹிமையால் ஏழு காண்டங்கள், ஐந்நூறு சர்க்கங்கள், இருபத்து நாலாயிரம் ச்லோகங்கள் அடங்கியதும், காயத்ரியின் இருபத்து நான்கு அக்ஷரங்களுக்கும் விஸ்தாரமான வ்யாக்யானமெனப் போற்றப்பட்டதுமான ஸ்ரீ இராமாயணமென்னும் மஹா காவ்யத்தை ஸ்ரீ வால்மீகி பகவான் நிர்மாணம் செய்தார்.

இவ்வாறு ரஸங்கள் ஸ்ரீ வால்மீகியின் எதிரே தோன்றி அவருக்குத் தங்கள் காட்சியைத் தந்து போக, அவர் ப்ரமதேவன் அனுக்ரஹத்தாலும், தம்முடைய தர்ம வீர்யத்தாலும், 'ஹஸிதம், பாஷிதம்' என்றபடி கதா புருஷர்கள் நகைத்தது, பேசியது முதலிய எல்லா வ்ருத்தாந்தங்களையும் தம் அகக்கண்களால் நன்கு கண்டார்.

அவற்றைப் பற்றி, அவர் தமக்குக் காட்சி கொடுத்த ரஸங்களைக் கூட்டிக் கொண்டு கவிபாட ஆரம்பித்தபோது, ஸமாஸம், ஸந்தி, சொல் நயம், பொருள் நயம் முதலிய காவ்யாம்சங்கள் யாவும் தாமாகவே அவர் கவிதையில் பொருத்தம் பெற்று விளங்கின.

முடிவுரை வாழ்த்து :

இவ்விதம் கவிதையால் தமக்கு இசைந்த 'காந்தர்' என வரிக்கப்பட்ட ஸ்ரீ வால்மீகி மஹர்ஷியால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ இராமாயணத்தின் வைபவத்தைக் கூறுவது, ஆயிரம் முகங்கள் உள்ள ஆதி சேஷனுக்கும் அஸாத்தியம். ஸ்ரீ வால்மீகியின் கவிதா சில்பத்தை மஹா புருஷசில்பம் என்று கூறுவதே தகும்.

எங்கும், எக்காலத்திலும், எல்லா வடிவமாகவும் இருப்பதாலேயே ஓரிடத்திலும், ஒரு காலத்திலும் ஒன்றாகத் தனித்துக் காண முடியாமல் பகவான் ஆகிவிட்டதையும், அதனால் எல்லாவிதத் தீவினைகளுக்கும் துன்பங்களுக்கும் ஆளாகி அறியாமைக் கடலிலே ஆன்மாக்கள் அனைவரும் ஆழ்ந்து கிடப்பதையும் அம்மஹர்ஷி நன்கு உணர்ந்தார்.

அந்தப் பகவானை ஒரு காலத்தில், அனந்த கல்யாண குணங்கள் பொருந்திய ஒரு மஹா புருஷனாக எடுத்துக் காட்டுவதே இவ்வுலகம் உய்வதற்கு ஹேதுவாகும் என்பதையும் நன்கறிந்தார். நாரதரைக் கண்டதும், 'கோன் அஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே குணவான்' என்று ஸ்ரீ வால்மீகி செய்த ப்ரச்னம் அவருடைய உட்கருத்தை வெளியிடுகிறது. ஒப்புயர்வற்ற கவிதா மஹிமையால் ஸீதா லக்ஷ்மணதி ஸமேதரான ஸ்ரீ ராகவனே பரம்பொருள் என்று, அன்று விசுவாமித்ராதி ரிஷிகளும், குகசபரிகள் போல் தாழ்க்குடிப் பிறப்பினரும், தாரை போன்ற பெண்களும், மாரீச, சூர்ப்பணகாதி துஷ்டர்களும் ஐயம் திரிபற அறிந்தவாறு, இக்காலத்திலும் ச்ரத்தாபக்தியுடன் ஸ்ரீ இராமாயணத்தைப் படிக்கும் யாவரும் அறியும்படிச் செய்திட்டார்.

இவ்வாறு மஹத்தான லோகோபகாரத்தைச் செய்த அம்மஹர்ஷியை எவ்வாறு உலகம் மறக்கக்கூடும்? கம்பர் அவரை மறக்கவில்லை; காளிதாஸர் மறக்கவில்லை; துளசிதாஸர் மறக்கவில்லை. மற்ற எந்தக் கவிதாம் மறந்தார்? இனியும் மறக்கப் போகிறார்கள்? நாமும் மறக்கலாகாது.

ஸ்ரீமந் நாராயணனை, நம் போன்ற நரராகவும், நரவானராதி அடியார்கள் அனைவரையும் அவரே போன்ற தன்மை வாய்ந்தவர்களாகவும் ஆக்கும் ரஸாயன முறையை அறிந்த ரிஷி, கவி ஸ்ரீ வால்மீகி பகவான் ஒருவரே என்று வாயினால் பாடி, மனத்தினால் சிந்தித்து அப்பகவான் எடுத்துக்காட்டிய தர்மங்களை நம்மால் இயன்ற அளவுக்குச் செய்வோமாயின், இம் மண்ணுலக வாழ்க்கை விண்ணுலக வாழ்க்கையாய் மாறிவிடுமென்பதில் ஸந்தேகமில்லை!

★



# உமாபதி சிவம்

சிவநெறியைச் செந்தமிழில்
செப்பவந்த திருவே
கொடிக்கவியாம் அருட்கவியைப்
புவிக்களித்த தவமே
திக்கெலாம் அறமோங்கத்
திசையெலாம் நலமோங்க
மெய்ஞ்ஞான ஒளியோங்க
மேலாஞ்சிவ நெறியோங்க
எந்நூலும் உன்நூலுக்
கிணையாகாதென அறிஞர்
எத்திசையும் உன்புகழை இசைக்கும்
படியாக
கண்ணுதல் பெருமானின்
கருணைபெற்ற நிதியே
உமாபதி சிவமென்னும்
பெயர்கொண்ட ஒளியே.

இந்தப் போற்றுதலுக்கும், புகழுரைக்கும் பாத்திரமானவர் கொற்றங்குடி அடிகள் என்றும், கொற்றங்குடிமுதல் என்றும் அழைக்கப்படும் உமாபதி சிவமாவர். வடமொழி தென்மொழிகளில் பெரும்புலமை பெற்றிருந்த இப்பெரியார் வடமொழியில் அனேக நூல்களையும், தமிழ்மொழியில் திருமுறைகண்ட புராணம், கோயிற்புராணம், திருநட்சத்திரக்கோவை, திருப்பதிகக் கோவை, திருப்பதிக்கோவை, சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராணசாரம் ஆகிய ஏழு வைதிக நூல்களையும், சிவப்பிரகாசம், வினா வெண்பா, திருவருட்பயன், உண்மை நெறி விளக்கம், போற்றிப் பஃறொடை, சங்கற்ப நிராகரணம், நெஞ்சுவிடுதூது, கொடிக்கவி ஆகிய எட்டு சித்தாந்த நூல்களையும் யாத்துள்ளார். இவர் இயற்றிய சித்தாந்த நூல்கள் எட்டும் 'சித்தாந்த அஷ்டகம்' என்ற பெயரால் அறியப்படுகின்றன.

சந்தானக் குரவர் நால்வருள் ஒருவராக எண்ணப்படும் உமாபதி சிவனார் திருக்காளத்தியில் சிவகோசரர் என்னும் பெரியாருக்கும், விசாலாட்சி என்ற பெருமாட்டியாருக்கும் மகவாய்ப் பிறந்து திரிலோசன சிவாச்சாரியார் என்ற பெயருடன் சிவனடியே சிந்திக்கும் மனத்தினராய் வாழ்ந்து வந்தார். திரிலோசன சிவாச்சாரியார் ஞான நூல்களை ஓதியும் ஓதுவித்தும், காளத்தியப்பரை அன்புடன் வழிபட்டு வருங்காலத்தில் பொங்கியெழும் பக்திப் பிரவாகம் கரைபுரண்டோட வாயுலிங்கத்துடன் ஏனைய பூதலிங்கங்களையும் தரிசித்து வர ஆவல் கொண்டு தல யாத்திரை மேற்கொண்டு அனேக திருத்தலங்களைத் தரிசித்துப் பின்னர் ஆகாசலிங்கத் தலமாகிய தில்லை யெனும் திருப்பெயருடன் விளங்கும் சிதம்பரம் வந்தடைந்தார்.

சிதம்பரத்தில் நடராஜப் பெருமானுக்குத் தில்லைவாழ் அந்தணர்கள் பூசை செய்வதைக் கண்குளிரக் கண்டு, அவர்களது பெறற்கரிய பேற்றினை வியந்து, "கற்பகோடிக் காலம் தவமிருந்தாலும் காணக் கிடைக்காத பேரருளே! கங்கையும், பிறையும், பாம்பும், கடுக்கையும் முடிமேல் வைத்த கண்ணுதல் பெருமானே! கருணை வள்ளலே! இந்த அந்தணர்கள் பெற்ற பேறு யான் பெற்றிலனே!" என்று மனமுருக வழிபட்டார். அப்பொழுது "அன்பனே! நீ இப்பொழுது காளத்தி சென்று அடுத்த பிறவியில் இவ்வந்தணர்களுள் ஒருவனாகப் பிறந்து எம்மைச் சேவிப்பாய்!" என்ற ஓர் அசரீரி எழுந்தது.

கொன்றை மலரணிந்த பிரானின் பெருங் கருணைத் திறத்தால் அடுத்த பிறவியில் திரிலோசன சிவாச்சாரியார் தில்லைவாழ் அந்தணர்களுள் ஒருவராகச் சம்பு தீட்சிதருக்கும், கௌரியம்மையாருக்கும் திருமகனாக உதயம் செய்து உமாபதி தீட்சிதர் என்ற நாமந்தரித்து வேத வேதாந்தங்கள், புராணங்கள், வியாகரணம், தருக்கம், சோதிடம் போன்ற அரிய கலைகளையெல்லாம் பயின்று, கண்ணுதல் பெருமானையே கருதும் மனத்தினராய் வாழ்ந்து வந்தார்.

தில்லை மூவாயிரவர்களுள் ஒருவராக நஞ்சுண்ட கண்டருக்குத் தொண்டு செய்து வருங்காலத்தில், தமது ஐம்பத்தாறுவது வயதில் ஒரு புரட்டாசி மாதத்தில் பூசைமுறை வர அதனை முடித்துக்கொண்டு பல்லக்கில் ஏறி அடியாட்கள் தீப்பந்தங்களை முன்னே பிடித்துச் செல்ல தம் வீடு நோக்கிச் சென்று கொண்டிருந்தபொழுது, அவர் செல்லும் வழியில் இருந்த ஒரு வீட்டின் திண்ணையில் தமது மாணுக்கர்களுக்குப் பாடம் சொல்லிக் கொண்டிருந்த மறைஞான சம்பந்தர் இது கண்டு, தமது மாணுக்கர்களை நோக்கி "அதோ! பாருங்கள்! பிறவிக் குருடன் பல்லக்கில் போகிறான்!" என்று

**திரு கி. அரங்கசாமி**, எம்.ஏ.,
பட்டாம்பி.

கூற, அது கேட்ட உமாபதி சிவனார் உண்மையை உணர்ந்து, தமது சிவிகையினின்றும் கீழிறங்கி வந்து, மறைஞான சம்பந்தரது கால்களில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து தம்மை அவரது சீடர்களுள் ஒருவராக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினார். குருவானவர் உண்ட உணவினது மிச்சத்தை உண்டு, தமது பிறவிப்பிணி நீக்க வந்த பேரருளாளர் இவரென்று மனத்துள் எண்ணி மூன்றாண்டுகள் அவருடனே தங்கியிருந்தார். இதனால் மகிழ்ந்த மறைஞான சம்பந்தர் அவருக்கு ஞான தீட்சை செய்து சிவஞானச் செம்பொருளை தெளியக் கூறி உணர்த்தினார். அதன் பின்னர் உமாபதி சிவனார் கொற்றங்குடி சென்று தம்மை வந்தடையும் பக்குவான்மாக்களுக்கு உபதேசம் செய்து ஞானாசிரியனாக விளங்கினார்.

ஒருநாள் உமாபதி சிவம் சிற் சபைக்குச் செல்ல, ஏதோ காரணத் தினால் அந்தணர்கள் அவர் அங்கு வரக்கூடாதெனத் தடுத்து விட்ட னர். மறுநாள் கோவிலுக்குப் பூசை செய்ய வந்த அந்தணர்கள் திருக் கதவம் திறந்து பார்த்தபொழுது அங்கு இறைவனைக் காணுமல் திகைத்துப் பஞ்சாட்சர மந்திரங்களை உருவிட்டு வழிபட, சிற்றம்பலமுடை யார் ஒரு கிழ பிராமண வேடந் தரித்து அவர்கள் முன் தோன்றி "உமாபதியின் நின்மல ஆசிரமத்தில் யாம் இருக்கின்றோம். நீங்கள் அங்கு வந்து எம்மைப் பெற்றுக் கொள்வீர் களாக!" எனவுரைத்து மறைந் தார். அது கேட்ட அந்தணர்கள் உமாபதி சிவனரது ஆசிரமத்திற்கு விரைந்து தம்பிழையைப் பொறுத் தருளுமாறு அவரை வேண்டி அம்பல வாணரைப் பெற்று மகிழ்ந்தனர்.

திருவிடை மருதூரில் விதிவசத் தால் நீச குலத்தில் பிறந்த ஒரு பெரி யார் நல்லொழுக்கத்துடன் வாழ்ந்து வந்தார். பெற்றான் சாம்பான் என் பது அவரது திருப்பெயர். ஒரு நாள் கங்கையைக் கரந்தபிரான் அவர் கனவில் தோன்றி "நீ சிதம்ப ரம் சென்று நமது யாகசாலைக்கும், கொற்றங்குடி உமாபதியின் ஆசிர மத்திற்கும் விறகு கொடுக்கும் பணியை மேற்கொண்டு எம்மைப் பணிந்து வருவாயாக!" என்று ஆக் ஞாபித்தார். அண்ணல் ஆணைப் படியே பெற்றான் சாம்பான் அப் பணியை வழுவாது ஐம்பது ஆண்டு கள் ஆற்றி வந்தார்.

ஒருநாள் பெருமழை பெய்ய ஆரம்பித்தது. வழக்கப்படி அவ ரால் உமாபதியாரது ஆசிரமத்திற்கு விறகு கொடுக்க முடியவில்லை. அத னால் ஆசிரம பூசைகள் முடங்கிப் போயின. அடுத்த நாள் சாம்பான் வரும்பொழுது தம்மைக் காணுமாறு ஏவலாட்களிடம் உமாபதிசிவனர் கூறினர். மறுநாளும் மழை தொடர்ந்து பெய்தது. ஈர விறகு களை எடுத்துக்கொண்டு ஆசிரமத்திற் குச் சாம்பான் வரும்பொழுது மன்ரு டும் பெருமான் அவர் முன் தோன்றி ஒரு கைச் சீட்டை அவரிடம் கொடுத்து அதனை உமாபதியாரிடம் கொடுக்குமாறு பணித்தார். சாம் பான் அந்த ஓலையைக் கொண்டு வந்து உமாபதியாரிடம் கொடுத் தார் அதில்

அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதிய கைச்சீட்டு— படியின்மிசை
பெற்றான் சாம்பானுக்குப் பேதமுறத் தீக்கை செய்து
முத்தி கொடுக்க முறை

—என்று எழுதியிருப்பதைப் பார்த்துத் திருவருள் ஆணைப்படியே சாம்பானுக்குத் தீட்சை செய்து முத்தியளித்தார்.

பெற்றான் சாம்பானது சுற்றத் தார் இவ்வரலாற்றைக் கேட்டு உமா பதியாரிடம் வந்து சாம்பானைப் பற் றிக் கேட்டனர். அதற்கு அவர் "சாம்பான் சித்சபேசரின் கருணை யினால் முத்தியடைந்தான்" என்று கூறியதை நம்பாமல் அந்நாட்டு மன் னனிடம் முறையிட்டனர். அம்மன் னனும் அவரை யடைந்து சாம் பானது சுற்றத்தார் ஐயத்தைத் தீர்க் கும் வண்ணம் வேறு ஒரு உயிருக்கு முத்தியருள வேண்டுமென்று கோரி னன். அவனது வேண்டுகோளுக் கிணங்க அவர் அருகே வளர்ந்திருந்த ஒரு முள்ளங்கத்திரி மரத்தின் பக் குவ நிலையை உணர்ந்து தமது திருப் பார்வையால் அதற்குச் சோதி வடி வத்தைக் கொடுக்க, அங்கே, அம் மரம் நின்றவிடத்து சுரேசுவரர் என்ற பெயருடைய முனிவர் தோன்றி உமாபதியாரது திருப் பாதங்களை வணங்கி தமது பூர்வோத் திரத்தை எடுத்தியம்பினர்.

"சுவாமி! இம்மரத்தினடியில் முன் னொரு காலத்தில் வத்சமுனிவர் தவம் செய்தார். அவர் இவ்விடத் தினின்றும் போகும்பொழுது இம் மரத்தினடியில் வேறு யாராவது தவம் செய்தால் அவர்களும் இம்மர வடிவை அடைவர் என்று கூறிச் சென்றார். நான் வேறு ஒருவர் வாயிலாக இதனையறிந்து வத்சமுனி வரை அணுகி இச் சாபத்திற்கு விமோசனம் அருளுமாறு வேண்டி னேன். அவர் "மரவடிவை அடை வோர் ஒரு பரம ஞானியினது அருட் பார்வையால் முத்தி பெறுவர்" என்று கூறினர். அது கேட்ட நான் இங்கு வந்து இம்மரத்தடியில் தவம் செய்யத் தொடங்கியவுடனே இம் மரவடிவை அடைந்தேன். தங்கள் திருப்பார்வையால் இன்று நன்மை யடைந்தேன்" என்று கூறினர்.

ஒரு வைகாசி மாதத்தில் கோவில் பூசை முறைகாரர்கள் கோவில் திருக் கதவம் திறந்து பார்த்தபொழுது இறைவனை அங்குக் காணவில்லை. அவர்கள் திகைப்பிலாழ்ந்தபோது இறைவன் அவர்கள் முன் தோன்றி "யாம் உமாபதியினல் இயற்றப் பட்ட கோயிற் புராணத்தில் குடி கொண்டுள்ளோம். நீங்கள் உமா பதியின் ஆசிரமத்திற்குச் சென்று அதனைப் பாராயணம் செய்வீர்களா னல் நாம் திரும்பி வருவோம்" என்று கூறினர். அந்தணர்கள் அதன்படியே சென்று உமாபதி யாரை வணங்கி கோயிற்புராணத் தைப் படித்துப் பொருள் சொல்லு மாறு கோரினர். அதன்படி உமா பதியார் கோயிற்புராணம் முழு வதும் பாராயணம் செய்து பொருள் கூறிய பின் அந்தணர்கள் கோவிலில் வந்து பார்த்தபொழுது அங்கு எம் பெருமான் உமாதேவியாருடன் இருப்பதைக் கண்டு மகிழ்ந்து கோயிற்புராணத்தை யானை மேல் ஏற்றி நகர் வலம் வந்து சிறப்புச் செய்தார்கள்.

மற்ரெரு நாள் சிற்றம்பலத்தில் விழாக் கொண்டாடும் பொருட்டு அந்தணர்கள் கொடியேற்ற முயன் ருர்கள். எவ்வளவு முயன்றும் இட பக் கொடியை அரைக் கம்பத்திற் குக் கூட ஏற்ற முடியவில்லை. அப் பொழுது "உமாபதியை அழையுங் கள்" என்ற அசரீரி எழுந்தது. அந் தணர்கள் கொற்றங்குடி சென்று அவரையழைத்து வந்தார்கள். அவர் வந்து கொடிக்கவி என்ற சிறு நூலைப் பாட யாருடைய முயற்சியும் இன்றியே இடபக்கொடி மரத்தின் உச்சிக்குச் சென்றது.

உமாபதிசிவம் தமிழகத்தில் தோன்றிய சித்தாந்த வித்தகர் பல ருள் ஒருவர். தமிழகம் செய்த தவப்பயனுல் இங்குத் தோன்றியவர். சிற்றம்பலம் என்றும் சின்மயரென் றும், குறைவில் அருள் ஞானமுதல் கொற்றங்குடி அடிகள் என்றும் தாயு மானசுவாமிகள் இவரது பெருமை யினைப் பேசுவார். சைவத்துக்கும், தமிழுக்கும் அச்சான்றோர் செய்த அருந்தொண்டினை உலகம் என்றென் றும் மறவாமல் நினைந்திருக்கும். ★

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 6

விமானத்தில் எத்தனை எத்தனையோ பாகங்கள் உள்ளன. கணக்கற்ற தகடுகள், ஆணிகள், பெரிய இன்ஜின்கள், சக்கரங்கள், இருக்கைகள்... இவ்விதம் வகை வகையான சாமான்கள் விமானத் தொழிற்சாலையில் குவிந்து கிடக்கின்றன. விமானம் எந்தெந்த சாமான்களின் தொகுப்பினால் ஆக்கப்பட்டிருக்கிறதோ அத்தனை சாமான்களும் அவை தயாரிக்கப்படும் தொழிற்சாலைகளில் தனித் தனியே அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். விமானம் ஓடத் தேவையான பெட்ரோல் மண்ணினுள் இருக்கிறது. ரன்-வேயில் ஓடுகையில் விமானத்தைத் தாங்கி நிற்கும் டயர்களின் மூலப் பொருளான ரப்பரின் பால் மரத்தில் இருக்கிறது. விண்ணில் காற்று இருக்கிறது. இத்தனையையும் தனித்தனியே பார்த்தால் நமக்கு விமானத்தின் தோற்றம் கிடைக்குமா? கிடைக்காது. விமானம் செய்யப்படும் தொழிற்சாலை அந்த விமானத்தின் அதிஷ்டானம் அல்லது இருப்பிடமாகிறது. தொழிற்சாலைக்குச் சொந்தக்காரனான அரசாங்கம் அதற்குக் கர்த்தா ஆகிறது. சக்கரங்கள், இஞ்சின்கள், இறக்கைகள், ஓட்டும் கருவி, பாரமானி போன்ற கருவிகள் அதன் இந்திரியங்கள் ஆகின்றன. பெட்ரோல் அதன் பிராணன் ஆகிறது. விமானத்தை ஓட்டும் பைலட் அதற்கு அதிஷ்டான தெய்வமாகிறான். இதே முறையில் தான் இறைவன் படைத்த அதி அற்புத இயந்திரமாகிய நமது உடலும் அமைந்திருக்கிறது.

இன்ப துன்பங்கள், விருப்பு வெறுப்புக்கள் மற்றும் அறிவு ஆகியவற்றை விளக்குவதற்கு இருப்பிடமாக உடல் உள்ளது. எனவே அது அதிஷ்டானம் எனப்படுகிறது. இன்ப துன்பம் போன்றவற்றை உபாதிகளாக ஏற்று அனுபவிக்கும் அஹங்காரமே அதன் கர்த்தா ஆகிறது. கர்மேந்திரியங்கள் மற்றும் ஞானேந்திரியங்கள் அந்த உடலின் இந்திரியங்கள் ஆகின்றன. நமது உடலின் இயக்கத்தைச் சீராக நடத்த பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து வகைப் பிராணன்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பிராணனும் ஒவ்வொரு வேலையைச் செய்கிறது. அந்தராத்மாவாகிய தெய்வம் உடலின் அதிஷ்டான தெய்வமாகிச் செயல்புரிகிறது.

மேலே கூறிய ஐந்தினுள் எந்த ஒன்று இல்லாவிடினும் செயல் எதுவும் நடைபெறாது என்பது மேலும் அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

சரீரவாங் மனோபிர்
யத் கர்ம ப்ராரபதே நர: |
ந்யாய்யம் வா விபரீதம் வா
பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ||(18-15)

"உடலால், சொல்லால், மனதால் மனிதன் நியாயமாக அல்லது அநியாயமாக எக்கர்மத்தைச் செய்தாலும் இந்த ஐந்துமே அதற்குக் காரணங்களாகும்"

செயல்புரியாது நம்மால் வினாடிப் பொழுதுகூட சும்மா இருக்க முடியாது. செயல் என்றால் பொதுவாக நாம் நம் உடலால் மட்டும் செய்யப்படும் காரியங்களையே குறிக்கிறோம். ஆனால் உடலால் மட்டுமின்றி மனதால், வாக்கால் செய்யப்படுவனவும் செய்கைகள் ஆகின்றன. இங்கு நமக்கு ஒரு முக்கியமான கருத்தைப் பகவான் உணர்த்துகிறார். உடலால் செய்யப்படும் கர்மத்தைப் போன்றே வாக்கினாலும், மனத்தாலும் செய்யப்படுகின்ற செய்கைகளும், நம்மையும், பிறரையும் பாதிக்கின்றன. பாபமோ அல்லது புண்ணியமோ இம்மூன்றாலும் நாம் செய்த வண்ணம் இருக்கிறோம்.

கத்தியை வைத்துக் கொலையும் செய்யலாம். ஆப்பரேஷனும் செய்யலாம். மண்ணெண்ணெயை வைத்துச் சமையலும் செய்யலாம். விலையுயர்ந்த பொருளை எரிக்கவும் செய்யலாம். மோட்டார் வண்டியைத் திருப்பதி, பத்ரிநாத், காசி போன்ற புண்ணிய ஸ்தலங்களைத் தரிசிக்கவும் பயன்படுத்தலாம் அல்லது கடத்தல் பொருள்களைக் கடத்திச் செல்லவும் பயன்படுத்தலாம்.

---

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.Sc., M.Ph.
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

---

அதே போல நம் உடலாகிய இந்த மோட்டார் வண்டியையும் நாம் நல்ல காரியங்களுக்கும் பயன்படுத்தலாம் அல்லது தீச் செயல்கள் புரிவதற்கும் பயன்படுத்தலாம். இன்று நாம் நம்மைச் சுற்றி என்ன காண்கிறோம்? அப்பப்பா! சொல்லவே நா கூசுகிறது! இனிமையான இயற்கை கொடுத்த அமிருதம் போன்ற நீர் இருக்க, உடலைக் கெடுத்து, மதியைக் கெடுத்து, உயிரையே குடிக்கும் போதை தரும் பானங்களால் தங்கள் உயிரையும், உடலையும் கெடுத்துக் கொள்பவர் எத்தனை பேர்? இனிமையான சுத்தக் காற்று நம்மைச் சுற்றி

*Statement about ownership and other particulars about*

## SAPTHAGIRI
## (MONTHLY)
### FORM IV
*( See Rule 8)*

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | ... | TIRUPATI. |
| 2 | Periodicity of its publication | ... | Monthly |
| 3 | Honorary Editor | ... | Sri S. Lakshminarayana, I.A.S. Executive Officer, T.T.D. |
| 4 | Printer's Name | ... | Sri M. Vijayakumar Reddy, L.P.T., |
| | Whether citizen of India | ... | Yes |
| | Address | ... | Manager, T.T.D. Printing Press, Tirupati. |
| 5 | Editor & Publisher's Name | ... | K. Subba Rao, M.A., |
| | Whether citizen of India | ... | **Yes** |
| | Address | . | Editor, Sapthagiri, T.T.D. Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. | ... ... | Board of Trustees represented by the Executive Officer on behalf of T. T. D., Tirupati. |

*I, K. Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

**TIRUPATI,**
*Date*: 28-2-1987.

**(*Sd.*) K. SUBBA RAO,**
*Signature of the Publisher.*

இருக்க சிகரெட், சுருட்டுப் புகையால் அதைக் கெடுத்து, தாங்களும் கெட்டு பிறரையும் கெடுக்கும் தீச்செயல் புரிவோர் எத்தனை பேர்! இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம்!

இந்த உடல்தான் குருக்ஷேத்ரம். அதைத் தர்ம க்ஷேத்திரம் என்றும் கூறலாம். அதை நற்செயல்களில் ஈடுபடுத்துவோரும் உளர். எண்ணத்தால், சொல்லால், பிறருக்கு நலம் புரிவோர் நல்லோராவர். அவர்கள் செய்யும் செயல்கள் தர்மத்துக்கு உடன்பாடானவைகள். அதற்கு மாறாக எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும் பிறருக்குத் தீங்கு இழைப்பவர்களும் நம்மிடையே இருக்கிறார்கள். அவர்கள் செய்யும் செயல்கள் தர்மத்துக்கு உடன்பாடானவை அன்று. இந்த நியாய, அநியாய கர்மங்களுக்கு மேலே சொன்ன ஐந்தும் துணையாயமைகின்றன.

கர்ம நடைமுறைக்கும், ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பு யாது என்ற கேள்விக்கு விடை அடுத்த சுலோகத்தில் வருகிறது.

தத்ரைவம் ஸதி கர்தார
மாத்மானம் கேவலம் து ய: |
பச்யத்யக்ருத புத்தித்வான்ன
ஸ பச்யதி துர்மதி: || (18-16)

"அது அவ்வாறிருக்க முழு முதற்பொருளாகிய ஆத்மாவைக் கர்த்தாவாக யார் பார்க்கிறானோ, புத்தி தெளிவடையாத அந்த அறிவிலி பார்க்கின்றானில்லை."

மோட்டார் வண்டியைப் பற்றி முந்திய சுலோகத்தில் ஆராய்ந்தோம். அந்த மோட்டார் வண்டி எவ்வெவற்றால் ஆக்கப்பட்டிருக்கிறதோ அத்தனைப் பொருட்களும் பூமியிலிருந்து வந்தவைகள். மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களும் அவ்வண்டியின் அமைப்புக்கும் இயக்கத்திற்கும் இன்றியமையாதனயாகின்றன. அவ்வண்டி ஓடுவதும், நிற்பதும் பூமியின்மீதுதான். ஆனால் மோட்டார் வண்டியின் எந்தச் செயலுடனும் பூமி சம்பந்தப்பட்டதல்ல: மோட்டார் வண்டியின் ஓட்டத்தில் பூமியைக் கர்த்தா என்று எண்ணுதல் சரியாமோ? சரியாகாது.

நமது உடலுக்கும் இது பொருந்தும். எது செயல்புரிகிறதோ அது கர்த்தா. பிரகிருதியின் கூறுபாடுகள் கர்மம் செய்கின்றன. தீ எரிகிறது, காற்று வீசுகிறது, மண் மணக்கிறது. இதெல்லாம் பஞ்ச பூதங்களின் செயல்பாடுகள், மேற்கண்ட சுலோகத்தில் கூறப்பட்ட ஐந்து காரணங்களில் அந்தராத்மா அல்லது தெய்வம் பிரகிருதியுடன் கூடியதா அல்லது ஆத்ம சொரூபமா என்ற ஐயம் எழலாம். பரமாத்மா செயலற்றது. செயல் கடந்தது, அதன் பிம்பமாகிய ஜீவான்மா பிரகிருதியுடன் சேர்ந்ததால் கட்டுப்பட்டது போலத் தோன்றுகிறது. ஜீவாத்மா சேதனம் போன்று தோன்றினாலும் உண்மையில் அது ஜடமான பிரகிருதியே யாகும். ஆத்மாவின் சன்னிதானப் பெருமையால் பிரகிருதி வேலை செய்கிறது. ஆத்மா சுத்த சைதன்யம். மாயா சக்தியாகிய பிரகிருதி ஆத்மாவை ஆரோபித்து அதன்மீது தோன்றிக் கொண்டிருக்கிறது. கிளிஞ்சலில் வெள்ளியைப் போல, மேகத்தில் யானையின் உருவத்தைப் போல கயிற்றினில் பாம்பினைப் போல, அப்படித் தெரிவதால் ஆத்மாவுக்கு லாபமும் இல்லை, நஷ்டமும் இல்லை.

மனிதனது உண்மை நிலை கர்மத்திற்கு அப்பாற்பட்ட பேரறிவு அல்லது சுத்த சைதன்யமே ஆகும். புத்தி தெளிவு அடைந்தவர்களுக்கு இந்த உண்மை புலனாகும். மற்றவர்களுக்கு இது புலப்படாது. அவர்கள் உடலையே ஆத்மாவாகத் தவறாகக் காண்பர். அவர்கள் காண்பது பொய்.

அப்படியானால் மெய்ஞானம் அடைந்தவர் யார்?

விடை அடுத்த சுலோகத்தில் வருகிறது. (தொடரும்)

# வால்மீகி திருவுள்ள விளக்கு

ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

கீழ்க் காட்டிய தேவேசத்வம் முதலிய மூன்று காரணங்களில் முதலதான தேவேசத்வமானது ஸ்ரீராமாயணம் பாலகாண்டம் பதினைந்தாம் ஸர்க்கத்தில் 'தேவேசனாகிய விஷ்ணு பிரமனாதியரைச் குறித்து இங்ஙனம் கூறினர்' (26) என்றவிடத்தில் கூறப்பட்டது.

அவ்யயத்வமென்னும் இரண்டாம் காரணம் அதே காண்டம் பதினாறாம் ஸர்க்கத்தில் 'இங்ஙனம் விஷ்ணுவினால் வினவப்பட்ட தேவர்கள் அனைவரும் அவ்யயரான - அழிவு அல்லது மாறுபடுதல் இல்லாதவரான விஷ்ணுவைக் குறித்து விடையளித்தனர்'(3) என்றவிடத்தில் சொல்லப்பட்டது.

மூன்றாமதான த்ருஹிண ஹர சுநாஸீர முக்ய அமரௌக ப்ரத்யக்ஷ அந்தர்த்தி: என்னும் காரணமும் அந்த ஸர்க்கத்திலேயே 'அவ்விஷ்ணுவானவர் தாம் மனிதராகவே அவதாரம் செய்ய அறுதியிட்டுப் பிரமதேவனிடம் 'நான் சென்று வருகிறேன்' என்று சொல்லிவிட்டு, தேவர்களாலும் மனிதர்களாலும் பூஜிக்கப்படுமவராய்க் கொண்டே அந்தர்த்தானம் அடைந்தார்' (=மறைந்தார்) (10) என்ற ச்லோகத்தினால் விளக்கப்பட்டது. இந்த ச்லோகத்தில் தேவ சப்தத்தாலே இந்திரன் சிவன் பிரமன் முதலான எல்லாத் தேவரும் கூறப்படுகிறார்கள்; அவர்களனைவருமே * முன்பு எடுத்துக்காட்டப் பெற்ற படியால் என்க. 'தேவர்களால் பூஜிக்கப்படுமவராய்க் கொண்டு விஷ்ணு மறைந்தார்' என்றதனால் தேவர்கள் அங்கு அருகிலிருந்து பார்த்துக் கொண்டிருக்கும்போதே விஷ்ணுவின் அந்தர்த்தானம் கூறப்பட்டதாகிறது.

இங்ஙனம் முற்கூறிய எல்லாக் காரணங்களாலும் வால்மீகி மஹர்ஷியானவர் விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்வத்தைக் கூறினர் என்கிறார் 'அசகதத' என்றதனால். முநீந்த்ர: - முனிவர்களில் மிகவுயர்ந்தவரான வால்மீகி, விஷ்ணும்=பகவானை நாராயணனை, பரம் - எல்லாரையும் விட மிகவும் உயர்ந்தவராகவும், ப்ரஹ்ம ச=ப்ரஹ்மமாகவும், அசகதத = கூறினர். அல்லது பரம் ப்ரஹ்ம=பர ப்ரஹ்மமாக, அசகதத=கூறினர்.

இவ்வாறு பாலகாண்டம் இருபத்தொன்பதாம் ஸர்க்கத்திற்கு முன்புள்ள ஸர்க்கங்களில் விஷ்ணுவுக்குப் பரப்ஹ்மத்வத்தை சாதிக்குமவையாக வால்மீகி முனிவர் கருதிய பதினாறு காரணங்களைத் தொகுத்துக் கூறி, இருபத்தொன்பதாவது ஸர்க்கத்திலுள்ள காரணங்களைத் தொகுத்துக் கூறுகிறார் 'ஏகோநத்ரிம்ச ஸர்க்கேபி' என்ற ச்லோகத்தினால்,

**ச்லோகம் 4 :**

ஏகோநத்ரிம்சஸர்க்கேऽப்யசகதத பரம் ப்ரஹ்ம ஸர்வாத்ம பாவாத், ஈத்ருக்சேதம் ததைதாவதிதி ச வசஸா க்வாப்யநிர்த்தேச்ய பாவாத் | கீதோக்தாத் வைச்வருப்யாத் அநிதரஸுலபாத் ஆகமாந்த ப்ரஸித்த - ஸ்வேச்சாதீநாச்ரிதார்த்தாவதரண கரணாத் சாபி விஷ்ணும் மஹர்ஷி: ||

**பதவுரை :**

மஹர்ஷி:=வால்மீகி மாமுனிவர், ஏகோநத்ரிம்சஸர்க்கே அபி=(விச்வாமித்திரர் இராமபிரானுக்கு ஸித்தாச்ரமத்தைப்பற்றிக் கூறுவதாகவுள்ள) இருபத்தொன்பதாவது ஸர்க்கத்திலும், ஸர்வாத்ம பாவாத்=எல்லாப் பொருட்கும் ஆத்மாவாக இருப்பதனாலும், இதம் ஈத்ருக் இதி=இது இப்படிப்பட்ட ஸ்வரூபமுடையது என்றும், ததா=அவ்வாறே, ஏதாவத் இதி ச=இந்த அளவுடையது என்றும், வசஸா=சொல்லால், க்வாபி=எவ்விடத்திலும் (உலகத்திலோ வேதத்திலோ எங்கும்), அநிர்த்தேச்ய பாவாத்=குறிக்க முடியாதிருக்கும் தன்மையாலும், கீதா உக்தாத்=பகவத் கீதையில் சொல்லப்பட்ட, வைச்வருப்யாத் = விச்வரூபமுடைமையினாலும், அநிதரஸுலபாத்=பிறருக்கு எளிதல்லாததாய், ஆகமாந்த ப்ரஸித்த=வேதாந்தங்களில் பிரசித்தமானதும், ஸ்வேச்சாதீந=தன்னிச்சையினாலானதும், ஆச்ரிதார்த்த=தன்னையடைந்தவர்களுக்காக ஏற்பட்டதுமான, அவதரண கரணாத் சாபி=அவதாரத்தைச் செய்வதனாலும், விஷ்ணும்=விஷ்ணுவை, பரம் ப்ரஹ்ம=பர ப்ரஹ்மமாக, அசகதத=கூறினர்.

தமிழாக்கம் :
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி.

**விசேடவுரை :**

'ஸர்வாத்மபாவாத்' என்பது முதற் காரணம். எல்லோர்க்கும் ஆத்மாவாக—அந்தர்யாமியாக இருக்கையாலே என்பது இதன் பொருள்.

ஸர்வருக்கும் அந்தர்யாமியாக இருத்தலென்பது பரப்ரஹ்மத்தின் தன்மையென்னும் விஷயம் முன்னமே முதலிக்கப்பட்டது. (ஆயினும் அது இங்கும் உள்ளமையால் மறுபடியும் கூறப்படுகிறதென்று கொள்க.) ஸர்வாந்தர்யாமித்வமென்னும் இக்காரணம், பாலகாண்டம் இருபத்தொன்பதாம் ஸர்க்கத்தில் 'பின்பு எல்லாப் பிராணிகளின் நன்மையில் விருப்பமுடையவரும் லோகாத்மாவுமான விஷ்ணுவானவர் தாமேபெரியவரென்ற எண்ணத்தை ஒழித்தவராய் மூன்றடி பூமியை யாசித்துப் பெற்று உலகங்களை அளந்து இந்திரனுக்குக் கொடுத்தார்' (19) என்ற ச்லோகத்தில் 'லோகாத்மா' என்ற சொல்லால் அறிவிக்கப்பட்டது. இங்கு வாமனனாக அவதரித்த விஷ்ணுவுக்கு லோகாத்மா என்பது அடைமொழியாகும். லோகத்திற்கு ஆத்மாவாயிருத்தலென்பது சேதந - அசேதந ரூபமான ஸகல லோகங்களுக்கும் அந்தர்யாமியாயிருத்தலேயாகும். ஆக லோகாத்மத்வமென்ற பரப்ரஹ்மத்தின் தன்மை விஷ்ணுவினிடம் கூறப்பட்டபடியால் விஷ்ணு பரப்ரஹ்மமென்று சாதிக்கப்பட்டதாயிற்று.

'இதம் ஈத்ருக், ததா ஏதாவத் இதி வசஸா க்வாபி அநிர்த்தேச்யபாவாத்' என்பது இரண்டாவது காரணம். இது இப்படிப்பட்ட ஸ்வபாவமுடையது (என்றும்) அங்ஙனம் இந்த அளவுடையது என்றும் சொல்லாலே உலக வழக்கிலோ வேத வழக்கிலோ எங்கும் குறிப்பிட முடியாமலிருக்கும் தன்மையினுல் என்பது இதன் பொருள். பேச்சுக்கு நிலமல்லாமையினுலென்றபடி. இந்த அநிர்த்தேச்யத்வமென்பது பரப்ரஹ்மத்திற்கே உரியதொரு தன்மையாகும்; பிற சேதநரும் அசேதநமும் (உயிரும் சடப்பொருளும்) சொல்லால் குறிப்பிட முடிவதனுல் என்க. அங்ஙனமல்லவா கேநோபநிஷத்து முதல் கண்டத்தில் ஒரு மந்த்ரம் கேட்கப்படுகிறது. அதற்குப் பொருள் வருமாறு: 'எப்பொருள் வாக் என்னும் இந்த்ரியத்தாலே சொல்லப்படாததோ அல்லது சொல்லுக்கு இலக்காகாததோ, எப்பொருளாலே வாக் என்னும் இந்த்ரியம் சப்தத்தை உச்சரிக்க வல்லதாகச் செய்யப்படுகிறதோ அல்லது சொல்லானது பொருளைக் குறிக்கத் தக்கதாகச் செய்யப்படுகிறதோ, அப்பொருளே பரப்ரஹ்மமென்று நீ அறியக்கடவாய். எந்தப் பொருளை ஜனங்கள் 'இது' என்று உபாஸநம் செய்கிறுர்களோ, இதுவென்று குறிக்கப் பெறும் அப்பொருள் ப்ரஹ்மமன்று' என்று. இதனுல் ப்ரஹ்மம் சொல்லால் குறிக்க முடியாததென்பது மிக விளக்கமாகவே அறிவிக்கப்பட்டது.

புராண ரத்நமென்னும் விஷ்ணு புராணத்திலும் "சரீரமில்லாமையினுல் ஜாதி முதலிய வேறுபாடில்லாததும் வாக்குக்கு இலக்காகாததும் பிறப்பு மாறுதல் வளர்தல் தேய்தல் அழிதல் என்ற விகாரங்களில்லாமையினுல் 'எப்போதும் ஒருபடிப்பட இருக்கிறது' என்று மட்டும் சொல்லத்தக்கதும் தனக்குத் தானே ப்ரகாசிப்பதும் ஜ்ஞானத்தையிட்டு நிரூபிக்கத் தக்கதுமான எந்தப் பரமாத்ம ஸ்வரூபம் உள்ளதோ அது ப்ரஹ்மமென்னும் பெயர் பெற்றது" (6-7-53) என்ற விடத்தில் சொல்லுக்கு இலக்காகாதிருத்தலென்பது ப்ரஹ்மத்துக்குரியதாக ஸ்பஷ்டமாகவே சொல்லப்பட்டது. இங்ஙனம் மற்றும் ச்ருதிகளும் ஸ்ம்ருதிகளும் எடுத்துக் காட்டத் தக்கன. இவ்வெல்லாவிடங்களிலும் சொல்லப்படுகின்ற வாக்குக்கு இலக்காகாமை என்பது 'ப்ரஹ்மம் இந்த ஸ்வரூபத்தையுடையது, இந்த அளவுடையது' என்று இவ்விதமாகக் குறிக்க முடியாமையே ஆகும். வெறுமனே பொதுவாக, சொல்லால் குறிக்க முடியாமை அன்று; ப்ரஹ்மமென்னும் சொல்லினுல் அது குறிக்க முடிவதனுல் சொல்லால் குறிக்க முடியாமை என்பது அதற்குப் பொருந்தாதாகையால் என்க.

இத்தகைய ப்ரஹ்மத்தின் தனித் தன்மையான குறிக்க முடியாமை என்பது; பாலகாண்டம் இருபத்தொன்பதாம் ஸர்க்கத்தில் 'ப்ரபுவே நீர் பிறப்பில்லாதவர், அநிர்த்தேச்யர்=இவர் இப்படிப்பட்டவர், இவ்வளவுடையவரென்று குறிப்பிட முடியாதவர், ஆகையால் நான் உம்மைச் சரணமடைகிறேன்' (14) என்றுள்ள கச்யபஸ்தோத்ரத்தில் அநிர்த்தேச்ய சப்தத்தினுல் விஷ்ணுவுக்குச் சொல்லப்பட்டு, அது விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்வத்தை நிலைநாட்டுகின்றது.

'கீதோக்தாத் வைச்வரூப்யாத்' என்பது மூன்றும் காரணம். ஐந்தாவது வேதமாகிய மஹாபாரதத்தின் ஸாரமான பகவத் கீதையில் பத்து பதினேராம் அத்தியாயங்களில் சொல்லப்பட்ட விச்வரூபத்தையுடைமையினுல் என்பது இதன் பொருள்.

கீதையில் பத்தாமத்தியாயத்திலோவெனில், 'கண்ணபிரானே நீ எப்படிப்பட்ட விபூதி (நியமன) விசேஷங்களோடு கூடியவனுய் இவ்வுலகங்களை நியமிப்பவனுக உள்ளே புகுந்து வ்யாபித்து நிற்கிறுயோ, ஆச்சரியங்களாய் உனக்கேயுரிய நியமன விசேஷங்கள் எவையெவை உள்ளனவோ அவற்றை நீயே ஒன்று விடாமல் சொல்லக் கடவாய்' (10-16) என்று பகவானுடைய விபூதியோகத்தைப்பற்றி (உட்புகுந்து நியமித்தலென்ற செயலோடு ஸம்பந்தத்தைப்பற்றி) அர்ஜுனன் கேட்க, 'தூக்கத்தையும் சோம்பலையும் வெற்றி கொண்ட விஜயனே, எல்லாப்ராணிகளுடைய ஹ்ருதயத்திலும் நான் ஆத்மாவாக இருக்கிறேன். இப்படிப்பட்ட நான் அப்பிராணிகளின் பிறப்பு காப்பு அழிவுகளுக்கும் காரணமாயிருக்கிறேன்' (10-20) என்று தொடங்கி (விஸ்தாரமாக விளக்கிவிட்டு) 'விஸ்தாரமாக என்னுல் சொல்லப்பட்ட நியமன விசேஷங்களைப்பற்றிய அறிவினுல் உனக்கு என்ன பயன்? சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள். இந்த சேதநா சேதநரூபமான இவ்வுலக

முழுவதையும் எனது நியமன சக்தியின் (உட்புகுந்து தூண்டும் ஆற்றலின்) ஒரு சிறு பகுதியினுல் தாங்கிக் கொண்டு நிற்கிறேன்' (10-42) என்று பகவான் உபதேசித்து முடித்தவளவில், அர்ஜுனன் அவ்வுபதேசத்தில் தனக்கு அதிகமான நம்பிக்கையுள்ளதென்பதைத் தெரிவித்து, அப்படிப்பட்ட நியமனசக்தியுடனும் கல்யாண குணங்களுடனும் கூடிய பகவானுடைய விச்வரூபத்தைத் தான் காணவேணுமென்ற ஆசையை 'ஈச்வரர்களாகிய பிரம்மாதி தேவர்களுக்கும் ஈச்வரனே, புருஷோத்தமனே, உன்னைப்பற்றி நீ எதைச் சொல்லி வருகிருயோ இதெல்லாம் உண்மையே, ஈச்வரனுன உனக்கேயுரியதாய் நியமன சக்தியையும் கல்யாண குணங்களையும் வெளிப்படுத்துமதான உனது விச்வரூபத்தைக் காண விரும்புகிறேன்' (11-3) என்று வெளிப்படுத்த, பகவானும் தனது சுத்தஸத்வ குணமுள்ள பொருளினுல் உண்டானதாய்ப் பரமயோகிகளுக்கும் மனத்திஞல் சிந்திக்கவும் வாயால் சொல்லவும் முடியாததாய் எல்லா வுலகிற்கும் ஆதாரமாய்த் திவ்யமான அந்த ரூபத்தைக் காட்டிஞன்.

ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியர்கள் உதித்தாலொத்த காந்தியையுடையதும் பல முகங்களையும் கண்களையும் கொண்டதும் சுத்தஸத்வ த்ரவ்யத்தாலான பல வகைப்பட்ட திவ்யாபரணங்களால் விளங்குமதும் பகைவரை அழிப்பதில் உத்ஸாஹமுடைய சங்கு சக்கரம் கதை வாள் வில் முதலான திவ்யாயுதங்களையேந்தியதுமாய்க் காண்போர்க்கு வியப்பூட்டுமதான பகவானுடைய அந்த ரூபத்தில் தேவர் மனிதர் விலங்கு தாவரம் ஆகிய இவற்றை உருவாகக் கொண்ட உலகத்தைத் தன் கண்ணெதிரே காண்கின்ற அர்ஜுனன் 'தேவனே உனது ரூபத்தில் - திருமேனியில் எல்லாத் தேவர்களையும் எல்லாப் பிராணிகளின் தொகுதிகளையும் பிரம தேவனையும் அவரெண்ணத்தின்படி நடக்கும் சிவபெருமானையும் எல்லா முனிவர்களையும் பளபளவென்று விளங்கும் ஸர்ப்பங்களையும் காண்கிறேன்' (11-15) என்று கூறினுன். இவ்வாது கீதையில் கூறப்பட்ட விச்வரூபமே 'ஆயிரந்தலைகளையுடையவன் புருஷன்' (=விஷ்ணு) (புருஷஸூ-1) என்றித்தகைய உபநிஷத் வாக்ய ஸமூஹத்திஞல் அறியப்பட்டதாகும். இங்ஙனம் பகவத்கீதையில் கூறப்பட்டதாய் பகவானுக்கேயுரித்தான விச்வரூபமுடைமையென்பது, இங்கு பாலகாண்டம் இருபத்தொன்பதாவது ஸர்க்கத்தில் 'ப்ரபுவே உனது திருமேனியில் இவ்வுலகமனைத்தையும் காண்கின்றேன்' (13) என்று கச்யபரின் துதியாக அமைந்த ச்லோகப் பகுதியில் விஷ்ணுவினிடம் கூறப்பட்டதாய்க் கொண்டு அப்பெருமானுக்குப் பரப்ரஹ்மத்வத்தைச் சாதிக்கின்றது. விச்வரூபத்தை நேரே காண்கின்ற அர்ஜுனன் எங்ஙனம் 'உன்னுடைய திருமேனியில் தேவர்களனைவரையும்காணுநின்றேன்' என்ருனே அங்ஙனமே இங்கும் 'உனது திருமேனியில் எல்லாவற்றையும் காணுநின்றேன்' என்று கச்யபர் கூறியதனுல், பகவத்கீதையில் கூறப்பட்ட விச்வரூபமுடைமையே இங்கும் கூறப்பட்டதென்று கூறியது மிகவும் நன்றென்று நிச்சயிக்கப்படுகிறது.

பிறருக்கு எளிதல்லாத என்னும் பொருள் பெற்ற 'அநிதரஸுலபாத்' என்பது 'ஆகமாந்த ப்ரஸித்தஸ்வேச்சாதீநாச்ரிதார்த்தாவதரணகரணுத்' என்ற நான்காவது காரணத்தில் அடைமொழியாகச் சேருகிறது. மற்றெவராலும் செய்யவரிதாய்—உபநிஷத்துக்களில் பிரசித்தமானதும் தன்னிஷ்டப்படி எடுத்துக் கொள்ளப்படுவதும் தன்னையடைந்த பக்தர்களுக்காக ஏற்பட்டதுமான எந்த அவதாரம் உள்ளதோ அதைச் செய்வதனுல் என்பது இவ்விரண்டின் பொருள். நல்வினை தீவினைகளின் வசத்திஞலன்றித் தன் விருப்பத்தின்படி உண்டானதும் பக்தர்களைக் காத்தலையே பயனுகக் கொண்டதுமான அவதாரங்களை மேற்கொள்ளுதலாலென்றபடி.

யஜுராரண்யகம் மூன்ரும் ப்ரச்நம் 'அத்ப்ய:' என்று தொடங்கும் அநுவாகத்தில் 'ப்ரஜாபதி: சரதி கர்ப்பே அந்த:. அஜாயமாநோ பஹுதா விஜாயதே. தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம். மரீசீநாம் பதம் இச்சந்தி வேதஸ:' என்று கேட்கப்படுகிறது.

இந்த ச்ருதிக்கு—ப்ரஜாபதி: = பிறப்பை இயல்பாகக் கொண்ட சேதநர்களுக்கு ஸ்வாமியான பரமபுருஷன் (விஷ்ணு), கர்ப்பே அந்த: = கர்ப்பத்தின் உள்ளே (= ஹ்ருதய குகையில்), சரதி = வசிக்கிருன். இதனுல் 'யோ வேத நிஹிதம் குஹாயாம்' (தை. ஆன—1) ஹ்ருதயத்தின் உள்ளேயிருக்கும் குகைபோல் நெருக்கமான இடத்தில் உள்ள ப்ரஹ்மத்தை எவன் உபாஸநம் செய்கிருனே) என்றதனுல் கூறப்பட்ட பரமாத்மத்வம் சொல்லப்பட்டதாகிறது. அத்தகைய பரமாத்மாவானவன், அஜாயமாந:=அநாதியான அறியாமை நல்வினை தீவினைகள் இவற்றில் உண்டான வாஸனை(—நெடுநாளைய பழக்கம்) ஆகியவற்றிற்கு முழுதும் வசப்பட்ட சேதநர்களைப்போல் பிறவாதவனுயிருந்தபோதிலும், பஹுதா = பலவிதமாக' அதாவது தேவர் மனிதர் விலங்கு தாவரம் ஆகிய பலவகைப்பட்ட வடிவையுடையவனுக, விஜாயதே = பலவிதமாகப் பிறக்கிருன். அதாவது ஒவ்வொரு ஜாதியிலும் பலவுருவுகளுடன் பிறக்கிருன் என்றபடி. தஸ்ய = அப்பரம புருஷனுடைய, யோநிம் = பிறப்பின் காரணத்தை, தீரா: = அறிவுடையாரில் தலைவர்களான பராசரர் முதலியோர், பரிஜாநந்தி = நன்ருக அறிவார்கள். அல்லது, தஸ்ய = அப்படி அவன் பிறப்பதற்கு, யோநிம்=காரணத்தை, தீரா: பரிஜாநந்தி = அறிவுடையாரில் சிறந்த பராசரர் முதலியோர் நன்ருக அறிவார்கள். மற்றவர்கள் அறியமாட்டார்கள் — என்பது பொருள். (தொடரும்)

# அருள் ஒளியும் திருவடிப் பேறும்

உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்பது ஆன்றோர் அமுத மொழி. மேலும் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்று மற்று மொரு உரை நம்மை அளவையியல் வழிநின்று ஒரு முடிவுரையைப்பெறத் தூண்டுகின்றது. அதாவது, 'பண்பு டையார் என்பார் உயர்ந்தோர்'. அதாவது, குணமெனும் குன்றேறி நின்றோர். இத்தகுமேன் மக்கள் நற் பண்புகளில் திளைத்து நன்மை தீமை களை ஆய்ந்து மக்கள் இப்புவியில் வாழ்வாங்கு வாழ வழி வகுப்பர். ஆனால் 'பிறவி வேண்டேன்' இப்பிறப் பிலேயே எய்தற்கரிய பேரின்பத்தை அடைய வேண்டும் என்று விழை வோர் மேலும் ஒரு படி சென்று,

"ஆண்டாய் உன்னைக் காண்பதோர்
அருள் எனக்கு அருளிதியேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை
விண்ணகர் மேயவனே".

என்று 'பார்க்குமிடமெங்கும் நீக்க மற நிறைந்துள்ள பரம்பொருளின் திருவருளில் திளைக்கப் பெற்றுத் திரு வடிப்பேறுபெற்று இவ்வுடம்பெடுத்த தின் பயனை அனுபவிப்பர். ஊத்தைப் பாண்டம் என்று இவ்வுடலினை ஒதுக்க முடியாது: உத்தமன்கோயில்கொண்டு உறையும் இவ்வுடம்பினுள்ளே உறை யும் ஆன்மாவைக் கண்டுணர்ந்து அதன் மூலம் பரம்பொருளின் திரு வருளைப் பெற்றால் மனை வாழ்க்கை என்பது வெறுத்து ஒதுக்கற்பாலது என்பது தெற்றென விளங்கும்.

நம்மாழ்வார், திருவாய்மொழி யில்,

மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்துஅடியை
அடைந்து உள்ளம் தேறி
ஈறில் இன்பத்துருவெள்ளம்
யான் மூழ்கினன்
பாறிப்பாறி அசுரர் தம்பல் குழாங்கள்
நீறெழப்பாய் பறவை யொன்று
ஏறி வீற்றிருந்தாய் உன்னை
என்னுள் நீக்கேல் எந்தாய்!

என்று பாடும்பொழுது தான்பெற்ற முடிவற்ற ஆனந்த நிலை என்றென் றும் நிலைபெற்றிருக்க வேண்டுமென நினைக்கின்றார்.

உலகியலில் நாம்பெறும் மகிழ்ச்சி கள் அனைத்தும் புலனாலும் மனத்தா லும் பெறுவனதான். நீர் மேல் குமிழ்போல் தோன்றும் இவ்வாழ்வை மெய்யன நம்பி, புலன் வழி நின்று, பொருளீட்டி, அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் இவற்றினை நீக்காமல் துன்பக் கடலில் ஆழ்ந்து அல்லல் படுகின்றோம். இவற்றினின் றும் நீங்கி உய்வதற்கு அப்பர் பெரு மான் கூறும் உபாயம்: "நல்ல மன முடையீரே! மனைவி, தாயார், தகப்ப னார், குழந்தைகள், பிற சுற்றத்தார் கள் என்று சொல்லப்படுகிற வினைக் கடலிலே அகப்பட்டு வெளியேற இய லாமல் அழுந்தித் துன்பப் படுவதற்கு இடமாகாமல் 'கனையுமாகடல் சூழ் நாகை மன்னு காரோணத்தானை' முறைப்படி நினைக்க வல்லீராயின் நீவிர் உய்வதற்கு வழியுண்டு."

அண்ட சராசரத்தையும் படைத் துக் காத்து அழிக்கும் பரமன் தானி ருக்குமிடமாக நல் அடியார்களின் உள்ளக்கோவில்களில் வீற்றிருக்கின் றான், திருவருளின் துணையோடு வினைப்பிறவியை அழிக்க விழையும் ஆன்மாக்களுக்கு இக்கருத்தை நன்கு வலியுறுத்துவர். மாணிக்க வாசகரும்,

தேன்மழச் சோலை பயிலுஞ்
சிறுகுயி லேயிது கேள்நீ
வான்பழித் திம்மண் புகுந்து
மனிதரை யாட்கொண்ட வள்ளல்
ஊன்பழித் துள்ளம் புகுந்தென்
உணர்வது வாய வொருத்தன்
மான்பழித் தாண்டமென் னேக்கி
மணாளனை நீவரக் கடவாய்.

என்று பாடுவதிலிருந்து பரம்பொருள் அளவற்ற கருணையினால் உலகைப் படைத்து, மனிதரின் உள்ளும் புகுந்து வழிப்படுத்தி நெறிப்படுத்தி ஆன்மிக உணர்வை ஊட்டி வளர்க்கிறது. எனி னும் ஐம்புலனும் மனமும் இந்நெறி யில் செல்லவிடாமல் தடுத்து வலிமை மிகுந்து தீ நெறியில் மானிடரை ஆழ்த்தி அலைக்கழிக்கின்றன. எனவே ஒருவர் ஆன்மஞானம் பெற விரும் பின் முதலில் அடக்க வேண்டியவை புலனும் மனமும். நாவுக்கரசர் கூறு கின்றார்: "என் உடம்பின் உள்ளே உனது அருளாலே ஞான விளக்கை ஏற்றி, அதனை தேவையான அளவு மேலே தூண்டி அதன் உதவியால் உய்வதோர் உபாயம் பற்றி உகக்கின் றேன். இம்மகிழ்ச்சிக்கு இடையூறாக


திரு. S. கோபாலகிருஷ்ணன் M.A. Ph D
சென்னை-5.


ஐம்புலன்களெனும் ஐவரை என்னுள் ளே இருக்கச் செய்துள்ளீர்; அவர் களே என்னிலும் மிக வல்லவர்கள். ஆகையால் இன்னது செய்வதென்று அறிய மாட்டாதவனாயிருக்கின்றேன், திருப்புகலூரில் உறைகின்ற பெரு மானே!"

பொய்கையாழ்வார், பூமியை விளக்காகவும், கடலை நெய்யாகவும், சூடான கிரணங்களைக் கொண்ட சூரியனைத் தீபமாகவும் கொண்டு பக வானை அறிந்து இடராழி நீங்கத் திரு வடித் துதிக்கின்றார். பூதத்தாழ்வார்

(36ம் பக்கம் பார்க்க)

# கலி அழிப்பது பெண்கள் அறத்தாலே

கலி யழிப்பது பெண்களற மடா
கைகள் கோத்துக் களித்து
நின்றுடுவோம்''

என்று பரவசமுடன் பாடும் பாரதியாரின் பெண்கள் பற்றிய அவர்தம் உயர்ந்த கருத்தினைச் சிந்தித்துணர்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இராம இலக்குவர்களை நோக்கி வனத்திலே விதியால் உந்தப்பட்டு வந்தான் விராதன். கருமை தழைத்தது போல், கொடுமை எழுந்தது போல், பாவம், விஷம், தீ ஓங்குவது போல் வந்தான், இருளைப் பூசிவரும் கலிகாலம் போல் வந்தான் என்றும் அந்த விராதன் வந்த நிலையினை வர்ணிக்கிறான் கம்பன்.

தங்கு திண் கரிய காளிமை
தழைந்து தவழப்
பொங்கு வெம் கொடுமை என்பது
புழுங்கி எழமா
மங்கு பாதகம் விடம் கனல் வயங்கி
நிமிரக்
கங்கு பூசி வருகின்ற
கலிகாலம் எனவே

அறத்தின் வடிவம் இராமபிரான். அறிவு கொண்ட ஆன்மாக்களது தொண்டு நெறியின் வடிவம் இலட்சுமணப் பெருமாள். அவர்கள் இருவரையும் நோக்கிச் சீதாப்பிராட்டியைக் கவர வந்த விராதனை, இருளடர்ந்த கலிகாலத்துடன் ஒப்பிடுவானேன்? அறத்தினை அறிந்து கொண்டு, தொண்டு நெறியிலீடுபட்டு வையத்துள் வாழ்வாங்கு வாழவிடாமல் தடுப்புச் சுவராக குறுக்கே நிற்பது—இருளடர்ந்த கலிகாலம் என்பதைக் குறிப்பிடவே, அதனை இலட்சம் யானைகள் பலங்கொண்ட கொடிய அரக்கன் விராதனுடன் ஒப்பிடப் பட்டது.

அறியாமை, பாச மயக்கம், விபரீத அறிவு, மறதி, சந்தேகம் ஆகிய தீய குணங்களே இருள் எனப்படும். இக்குணங்கள் மலிந்து கிடக்கும் காலமே கலிகாலம் எனப்படும்.

அந்தத் தடுப்புச்சுவரைத் தகர்த்து அப்புறப்படுத்தும் கருவி — பகவந் நாமமாகிய கொழு. அந்தக் கொழு உற்பத்தி செய்யும் பட்டறை—தனக்கென வாழாது பிறர்குரியாளராக வாழும் பாகவதோத்தமர்களுடைய திருவுள்ளம். அந்தத் திருவுள்ளம் செழிப்புற்று வளர உறுதுணையாயிருப்பது மை தீட்டப்பட்ட மங்கையர்த் திலகங்களின் கண்களாகும்.

கலிகாலத்திற்கே உரித்தான ஆயுதமாம் ஆணவ மலத்துடன் இராம இலக்குவர்களோடு போரிட்டான் விராதன். அவனைத் தாக்கின அவர்களுடைய திருப்பாதங்கள். பூர்வ புண்ணியவசத்தால் அவர்களது மறக் கருணைக்கு இலக்கானான். அதன் பயனாக அகற்றினான் அவனுடை ஆணவ மலத்தை; இராமபிரானை அறிந்தான்-அவனது உண்மையறிவு வந்து உதவியதால்; துதிப்பாடல்களாக வெளியிட்டான் அவனது ஆத்மாவின் உள்ளக் குமுறல்களை!

அத்தகைய துதிப் பாடல்களைப் பாடி, ஆனந்தப் பரவசத்தில் ஆடிப் பக்தி நெறியினைப் பரப்புகிறார்கள் பகவத் பக்தர்கள். ஏன்?

கலியின் கொடுமையிலிருந்து மக்களை விடுவிக்க என்கிறார் ஸ்ரீ நம்மாழ்வார். 'அவர்கள் பயமின்றி எங்கும் சஞ்சரிக்கிறார்கள். அவர்களால் பூவுலக மக்களுக்கு நரக பயமில்லை; எமனுக்கு வேலையில்லை; மக்களிடையே எந்தவிதமான பூசல்களுமில்லை' என்று பொலிக பொலிக பொலிக என்று பாடி வெற்றி முரசு கொட்டுகிறார் ஸ்ரீநம்மாழ்வார். அவர்கள் விண்ணுலகிலிருந்து மண்ணுலகில் இறங்கிய தேவர்கள் என்றும் போற்றுகின்றார்.

பொலிக பொலிக பொலிக
போயிற்று வல்லுயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த நமனுக்
கிங்கியா தொன்றுமில்லை
கலியும் கெடும் கண்டு கொள்மின்
கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்திசை பாடி யாடி
யுழிதரக் கண்டோம்.
—(திருவாய்மொழி 5.2.1)

பகவத் பக்தர்களுடைய பெருக்கத்தால்தான் கலியின் கொடுமைகள் கெடும் என்பது ஸ்ரீ நம்மாழ்வாரின் கருத்தாகும். அப் பெருக்கத்திற்கு உறுதுணையாயிருப்பவர்கள் பெண்கள்; அவர்களால் இயற்றப்படும் அறங்கள். எனவே, "கலி யழிப்பது பெண்களறமடா" என்று பாடினார் பாரதியார்.

---

ஸ்ரீவில்லிபுத்தூர்
**ஏ. ஸ்ரீராமுலு தேசிகன்,**
புதுச்செந்நெல்குளம்.

---

பிருந்தாவனத்துக் கோபிகளைப் போல் இல்லற வாழ்வோடு பக்தியையும் கடைப்பிடித்து வாழும் பகவத் பக்தர்களுக்கு ஸ்ரீநம்மாழ்வார் குறிப்பிட்ட திருநாமம் — கடல் வண்ணன் பூதங்கள். கடலின் நிறங்கொண்ட சிற்றுயிர்கள் என்று பொருள்படும்.

உற்பத்தியாகும் இடத்தைப் பொறுத்துப் பெருமை, சிறுமையடைவதில்லை ஆறு. அது பயன்படும் தன்மையினைப் பொறுத்தேயடையும். அது போல சிற்றுயிர்கள் பிறப்பைப் பொறுத்தும் பெருமையடைவதில்லை. செயற்கரிய செய்யும் செயலினைப் பொறுத்தேயடையும். சூழ்நிலை

களைப் பொருத்துப் பல கோணங்க ளுடன் பாயும் ஆறு. அவைகளை நிமிர்த்துக்கொள்வது கடலில் கலக்கும் பொழுதே. சூழ்நிலைகளைப் பொறுத்துப் பல கோணங்களுடன் பாயும் சம்சாரமாகிய ஆற்றில் நீந்திக்கொண்டு செல்லும் சிற்றுயிர்களின் அறிவுக் கோணல்கள் நிமிர்த்தப்படுவது இறைத் தொண்டிலீடுபடும் பொழுதே. பலவிதமான வாசனைகளுடன் செல்லும் ஆறு, கடலில் கலக்கும் பொழுது அது அடைவது கடல்நீரின் வாசனையையே. அது போல பலவிதமான குணவியல்புகளுடன் செயல்படும் சிற்றுயிர்கள் இறைவனுடைய குணவியல்புகளையடைவது இறைத்தொண்டிலீடுபடும் பொழுதே. ஆகவேதான் பகவத் பக்தர்களுக்குக் கடல்வண்ணன் பூதங்கள் என்று திருநாமமிட்டார் ஸ்ரீ நம்மாழ்வார்.

பகவத் பக்தியின் எல்லைநிலம் பாகவத பக்தி. அதிலீடுபடும் பொழுதே தன்னியல்புகளையும் இறைவனது இயல்புகளையும் உணர்ந்து அவனருளால் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்ள முடியும். அப்படிப் பணி கொள்ளத் தனது பேரழகினை விரும்பும் காதலனுக்கு உறுதுணையாக நின்றாள் ஒரு மங்கையர்த் திலகம். கலி யழித்து அறங்களை நிலை நாட்டுவதே பெண்களுடைய பிறவிப் பயன் என்பதை அவள் நன்கு உணர்ந்திருந்தாள்.

'மானிடர் செய்கையனைத்தையும் கடவுளர்க்கு இனிதாகச் சமைப்ப நாம்', என்று கர்மயோகத்திலீடுபடும் புதுமைப் பெண்களைப் பற்றிக் குறிப்பிடுவான் பாரதி. அத்தகைய ஓர் புதுமைப் பெண்ணாகத் தற்காத்துத் தற்கொண்டானையும் பேணி வாழ்ந்திருந்தாள் அம்மங்கையர்த் திலகம்.

பேரழகும் குணமும் கொண்ட அத் திலகத்தைத் திருமணம் செய்ய விரும்பினான் திருக்குறையலூர் மன்னன் நீலன். கட்டழகும் பேச்சாற்றலும் உடைய அவனைக் கண்டு மகிழ்வுற்றாள் குமுதவல்லி. ஆனால் உணர்ச்சிவசப்படவில்லை. 'ஸ்ரீவைஷ்ணவரைத் தவிர வேறு யாரையும் திருமணம் செய்யப் போவதில்லை' என்ற கொள்கையில் உறுதிப்பாடுடையவளாயிருந்தாள். திருவிலச்சினை செய்து திருமண் காப்பு தரித்து உடல் தோற்றத்தில் ஸ்ரீ வைஷ்ணவனாக அவள்முன் நின்றான் அந்த நீலன். நின்றவன் மீது தன் கடைக்கண் பார்வையினை வீசி எறிந்தாள். அதை அவன் பிடித்து உள்ளத்தில் தேக்கி வைத்துக் கொண்டான். காதலின் சக்தி அவனை ஆட்டிப்படைத்தது. அவளுடைய ஆணைக்கு அடிபணிந்து காத்துக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தைப் பயன்படுத்தினாள்; அவனை அவனை உள்ளத்தளவில் ஓர் உண்மையான ஸ்ரீ வைஷ்ணவனாக்க விரும்பினாள்; அதற்கு ஓர் எளிய வழியைக் கண்டாள். ஒரு வருட காலம் நாள்தோறும் ஆயிரத்தெட்டுப் பகவத் பக்தர்கட்குத் ததியாராதனைக் கைங்கர்யம் (உணவளிக்கும் தொண்டு) செய்ய வேண்டுமென்று ஆணையிட்டாள்.

"காற்றிலேறி யவ் விண்ணையுஞ் சாடுவோம், காதற் பெண்கள் கடைக் கண் பணியிலே" — என்று காதலர்களின் உள்ளக் குமுறல்களை வெளியிடுவான் பாரதி.

குமுதவல்லியின் கடைக்கண் பணியில் தன்னுடைய ததியாராதனைப் பணியைத் தொடர்ந்தான் நீலன். அவனைத் திருமணம் செய்து கொண்டாள் குமுதவல்லி. செம்மைப்படுத்தினாள் அவனது புலனுணர்வுகளை; தணித்தாள் அவைகளில் அடங்கிய காதல் ஜுரத்தின் தணலை; அவள் தன் கடைக்கண்களால் அவைகளை விசிறி விடவில்லை உடற்பற்றினை நோக்கி; விசிறிவிட்டாள் ஆன்மத் தத்துவப் பற்றினை நோக்கி; அதன் பயன், உய்வதோர் பொருளால் உணர்வென்னும் பெரும்பதம் தெரிந்தான்; நாடிக் கண்டு கொண்டான் நாராயண நாமத்தை; காதல் செய்த மனைவியின் மூலம் அடைந்தான் கடவுள் நிலையினை, அந்த நீலன்.

"காதல் செய்யும் மனைவியே சக்தி,
கண்டீர்
கடவுள் நிலை அவளாலே யெய்த
வேண்டும்"

என்ற பாரதியின் வாக்கு மன்னன் நீலன் — குமுதவல்லி தம்பதிகளிடையே அக்காலத்திலே அமைந்திருந்தது.

'கலி யழிப்பது பெண்கள் அறத்தாலே' என்பதை உணர்ந்தவள் அல்லவா அந்த குமுதவல்லி! அவள் மூலம் உண்டான பரம பக்தியால் வளர்க்கப்பட்ட மன்னன் நீலனுடைய உள்ளம், கலியின் கொடுமைகளிலிருந்து அதாவது அறியாமை பாசமயக்கம், விபரீத அறிவு, மறதி, சந்தேகம் ஆகிய தீயகுணங்களிலிலிருந்து விடுபட்டது.

"சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்ப வெள்ளத்து ஆழ்ந்தேன்" என்று குள்ளக் குளிரக் குடைந்து காதல் நீராடித் தப்புத் தாளங்களுடன் அபசுருதியில் பாடி மன்னனாயிருந்த காலத்தில் கும்மாளமடித்ததைத் தவறு என்று உணர்ந்து பாடும்படிச் செய்து விட்டாள் நீலனை அந்த மங்கையர்த் திலகம் குமுதவல்லி. அதே நீலனை, "நின் திருவெட்டெழுத்தும் கற்று, உற்றதும் உன்னடியார்க் கடிமை" என்று இறைவனருளால் திருமங்கையாழ்வராக மாறுவதற்கும் உறுதுணையாக இருந்தாள் அந்தத் திலகம்.

கலி யழிப்பது பெண்களறமடா
கைகள் கோத்துக் களித்து
நின்றாடுவோம்



# திருப்பதி ஸ்ரீ கோதண்டராமர்

திரு. அ. நடராஜன்,
திருப்பதி.

"நம்பியைக் காண நங்கைக்கு
ஆயிரம் நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந் தோறும்
குரிசிற்கும் அன்னதேயால்
தம்பியைக் காண்மின் என்பார்
தவமுடைத்து உலகம் என்பார்
இம்பர் இந்நகரில் தந்த
முனிவனை இறைஞ்சும் என்பார்"

என்னும் இவ்வரிகளில் ஸ்ரீராம சீதா இலக்குமணர்களின் பேரழகு பரக்கப் புகழப் பெறுகின்றது. "அந்த ராம சௌந்தர்யம் என்றால் அறிந்து சொல்லப்போமோ" என்னும் அருணாசலக் கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனையும் அக்கருத்தினையே வலியுறுத்துகின்றது. இராமனின் கதை இந்திய மக்களின் கலாச்சார வாழ்வினிலே இரண்டறக் கலந்துவிட்டிருக்கிறது எனின் மிகையாகாது.

சிறப்பாகத் தென்னாட்டிலேயே இராமர் கோயில்கள் பலப்பல ஊர்களில் அமைந்திருப்பது கவனிக்கத் தக்கது. அவற்றிலுள்ள தெய்வப் படிமங்கள் எழில்மிகுந்தனவாய், கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்வனவாய் இருப்பதைப் பார்க்கும் போது, தென்னாட்டின் சிறந்த சிற்பிகளின் கைவண்ணமும் கலைத்திறனும் நமக்குப் புலனாகும். அத்திருத்தலங்களிள்ளும்கூட, பேரெழில் வாய்ந்த வடிவங்களை உடையவை எனப் புகழ் பெற்று விளங்கும் வடுவூர் இராமர், திருவல்லிக்கேணி இராமர், மதுராந்தகம் இராமர் முதலியவற்றுடன் கூடப்பொலிவுடன் விளங்குவது திருப்பதியின் நடுவில் இலங்கும் கோதண்டராமர்.

"தோள் கண்டார் தோளே கண்டார்
தொடுகழல் கமலம் அன்ன
தாள் கண்டார் தாளே கண்டார்
தடக்கை கண்டாரும் அஃதே .."

என்றவாறு, திருப்பதியில் உள்ள இராமர் கோயுலின் திருவுருங்கள் நம்மைத் தம்பால் ஈர்த்துப் பதியவைத்து மெய்மறக்கச் செய்கின்றன.

ஆனால், திருமலைக்கு வரும் பெரும்பாலான யாத்திரிகர்களுக்கு அத்தகைய ஆலயம் இருப்பதே தெரியாது. அதிலும், திருமலை அடிவாரத்திற்கு ஊரினூடே செல்லும் பாதைக்கு மாற்றாக புதிய (பேருந்துத்) தடங்கள் அமைந்ததனாலும், திருமலை சென்று திருவேங்கடவன் தரிசனம் பெற்றுத் திரும்புவதே பெரும் பிரயாசையாகப் போய்விட்டதனாலும், இவ்வழகிய ஆலயம் அவர்களுடைய பயணத்திட்டத்தில் இடம் பெறாது போய்விட்டதோ என்று எண்ணத்தோன்றுகிறது. ஆயினும் அண்மையில், திருச்சானூர், திருப்பதி, ஸ்ரீநிவாஸமங்காபுரம் கோயில்களுக்கு, 'ஆலய தரிசனம்' என்னும் பேருந்துப் பயண வசதி ஒன்று திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தாரால் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பது



உட்கோபுர வாசல் தோற்றம்



கோயிலின் உட்தோற்றம்

காரணமாக, இக்கோயில் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ளும் ஆர்வம் பயணிகளிடத்தில் உண்டாயிருக்கும் என்று நினைக்கத் தோன்றுகிறது. அவ்வார்வத்தை ஓரளவு நிறைவு செய்வதும் இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

திருப்பதி கிழக்குப் புகைவண்டி நிலையத்திற்கு அருகிலுள்ள கோவிந்தராஜர் கோவிலின் தெற்குமாடத் தெருவின் மேலக்கோடியிலிருந்து நேராக வடக்கே சென்றால், ஒரு கிலோமீட்டர் தொலைவிற்குள்ளாகவே திருமலை அடிவாரத்திற்குச் செல்லும் பாதையில் கோதண்டராமர் கோயிலின் சந்நிதித் தெருவிற்கு வருவோம். கோயிலுக்குள் நுழைவதற்கு முன் அதைப்பற்றிய சில புராணம் மற்றும் வரலாற்றுச்செய்திகளை நாம் அறிந்து கொள்ளலாமே!

புராணம்:

இராவணனை வென்று இலங்கையிலிருந்து அயோத்தி திரும்புகையில், இராமர், சீதை, இலக்குமணன் மூவரும் இங்கு ஓரிரவு தங்கினர் என்பது வராக புராணக் கூற்று. திரேதா யுகத்தில் ஜாம்பவானால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பது ஒரு சுவையான விவரம்.

சந்திர வம்சத்தைச் சேர்ந்த ஜனமேஜய அரசன் இத்கோயிலை நிருமித்து, இதில் இராமரைப் பிரதிஷ்டை செய்ததாகவும் சொல்லப் படுகிறது.

வரலாறு:

கோவிந்தராஜசுவாமியின் ஆலயத்தில் இருக்கும் கூரத்தாழ்வார் கோவில் சுவர் ஒன்றிலிருக்கும் ஒரு கல்வெட்டிலிருந்து, விஜயநகர அரசன் சாளுவ நரசிம்மன் காலத்தில், கி. பி. 1480 அல்லது 1481-இல், அரசனின் மேன்மையின் பொருட்டு, சடகோபதாஸர் நரசிம்மராய முதலியார் என்பவரால் இக்கோவில் கட்டப் பெற்று, இரகுநாத சுவாமி சிலை அமைக்கப் பெற்ற விவரம் காணப் படுகிறது. ("நரஸிம்மராய உடையார்க்கு தர்மமாக கட்டுவித்து ரகுநாதனை ப்ரதிஷ்டையும் பண்ணி...").

இராமர் கோவிலிலேயேயுள்ள, பி. பி. 1530-ஆம் வருடத்திய ஒரே ஒரு கல்வெட்டு, குமார ராமானுஜ அய்யங்கார் என்பவர் வீர அச்சுத ராய மகாராஜாவின் மேன்மைக்காக, இக்கோவிலுக்காக மரத்தேர் ஒன்றை நிருமித்ததாகக் கூறுகின்றது.

அயோத்யா ராமானுஜ அய்யங்கார் என்பவர் கோயில் திருச்சுற்றையும் ராஜகோபுரத்தையும் கட்டியதாகவும் அறிகின்றோம்.

இங்குள்ள இராமர், கோவிந்தராஜசுவாமி ஆலயத்தில் உள்ள இராமானுஜரின் கோவிலில் திருநின்றவூர் உடையார் விக்னேசுவர சீமான் என்பவரால் 1488-இல் வேறொரு இரகுநாதர் விக்கிரகம் அமைக்கப்பட்டதன் காரணமாக, பெரிய இரகுநாதர் என்றே முதலில் அழைக்கப்பெற்று வந்ததாகத் தெரிகிறது.

திருப்பதி குமார ராமானுஜபுரத்தில் வசிக்கும் நரசிம்மராய முதலியார் இக்கோயிலின் நித்திய பூஜைகளுக்கும் திருக்கார்த்திகைத் திருவிழாவிற்கும் தேவைப்படும் சில நிலங்களை நிவந்தமளித்ததாகவும் அறியப் படுகிறது.

தனியார் கோவிலாகவே இருந்து வந்த இது சில ஆண்டுகளுக்குள்ளாகவே திருமலை ஸ்தானத்தாரின் மேற்பார்வையினுள் வந்ததாகத் தெரிகிறது.

எனினும், கிழக்கு இந்தியக் கும்பெனியார் திருப்பதி - திருமலைக் கோவில்களைத் தமது கட்டுப்பாட்டிற்குள் கொணர்ந்தபோது தயாரிக்கப் பெற்ற 'சவால்ஜவாப் பட்டி' என்னும் 'வினு-விடைப்பட்டியல்' என்பதில், குண்டப்பா மற்றும் வெங்கடராவ் என்று இரு தர்மகர்த்தர்கள் இக்கோவிலுக்கு இருந்ததாகவும், வசூலிக்கப்பட்ட காணிக்கை வருமானத்தில் கோயில் ஊழியர்கள் தமது சம்பளத்திற்கும் விறகுக்கும் செலவு செய்யப்பட்டது என்றும் பிரஸாதங்களை விற்றுவந்த கோயில் சமையற்காரர்கள் குத்தகைக்குரிய பணத்தை

(29-ம் பக்கம் பார்க்க)

பெரிய சேஷவாகனத்தில் உற்சவர்





வன் வான்மீகத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டும் சில கருத்துக்களை இனிக் காண்போம்.

வான்மீகி, கம்பன் ஆகிய இரு பெரும் கவிஞர்களுமே இராமனை இறைவனின் திருவவதாரமாகவே கொள்கின்றனர். வான்மீகியின் கதைப் போக்கினில் திருமால் மற்ற தேவர்களின் யோசனையின் பேரில் இராமனாக, மன்னு புகழ் கோசலையின் மணி வயிறு வாய்க்க இசைந்ததாகக் காணப்படுகிறது. ஆனால் கம்பன், உலகினில் அறம் நலிந்து மறம் மலியுங்கால் ஆண்டவன் தோன்றி அறத்தை நிலைநாட்டுவான் என்று கீதையில் கண்ணன் கூறிய கருத்தினை அடியொற்றி, "அலைகடல் நடுவண் அனந்தன் மீமிசை மலையென விழி துயில் மாதவன், உலையுற்ற அமர்க்குக் கொலைத் தொழில் அரக்கர் தம் கொடுமையைத் தீர்ப்பேன்" என்று உரைத்த வாய்மையைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறான். இருளுறு கசட வாழ்க்கைக்கு இன்னருள்

# காவியங்களில் காகுத்தன் கதை

திருமதி என். ஜெயா,
பி.எஸ்ஸி., பி.எட்.,
ஒரத்தநாடு.

தண்ணியல் சேர் தமிழணங்கின் தவமதனால் இத்தாரணியில் தோன்றினான் கம்பன். கரையறியாக் காட்டாற்று வெள்ளம்போலக் கவி பொழிந்து வான்மீகி உலகுக்கீந்த இராம காதையினது திரையறியா ஓட்டத்தினைத் தடுத்துத் தேக்கிக் கால்வாய்களைத் திறமிகக் கட்டிப் பாய்ச்சி இலக்கியமென்னும் ஒரு பூஞ்சோலையை உருவாக்கியவன் கம்பனெனும் சொல்வேருழவன். வான்மீகி எனும் தவசி காட்டு மலர்கள், நறுமணவேர்கள், பச்சிலைகள் இவையெல்லாம் ஒன்று சேர்த்து ஓர் பூப்பொதியாம் இராமன் கதையினைக் கம்பனிடம் கட்டோடு ஈந்தான். கம்பன் அதன் இனத்தை யெல்லாம் ஆய்ந்தறிந்து இணைத்துக் கோர்த்து மணம் திகழும் கம்பராமாயணமெனும் மாலையாக்கி இத்தரணிக்கே சூட்டி வைத்தான். தவமுனி வான்மீகி வனத்திடையே தான் கண்டு, அதன் பின் கொண்டுவந்த பலாவின் கனியைப் பாருக்கீந்தான். தமிழ்த்தாய் நோற்ற மைந்தனும் கம்பன், அதன் மேல் படிந்த பிசினகற்றி, மெள்ளக்கீறி, மெதுவாய்ச் சுளையெடுத்துத் தித்திக்கும் தீந்தமிழ்த் தேன்கூட்டித் தமிழ்ப் பண்பினில் தோய்த்தெடுத்து அறிஞர்கட்கோர் விருந்து வைத்தான்.

மதிபடைத்த புலமையுள்ளோர் எவரும் போற்ற மங்காத பெருவாழ்வு தமிழுக்கீந்து, துதிபடைத்த இராம காதை தோன்றச் செய்த சொல்வல் சுரக்கும் செம்மல் தானாகவே அமரர்கள் குறையைத் தீர்க்க முன்வந்ததாகக் கூறுகிறான்.

வான்மீகி முனிவர் இராமனைத் தெய்வத்தின் மறு அவதாரம் என்று புகழ்ந்துரைத்த போதிலும் இராமன் தான் இறைவன் என்று மொழிவதில்லை. மேலும் இராமனை திருமாலின் பாதியாகவே காட்டுகிறார். ஆனால் கவின் மொழிக் கம்பனுக்கு இராமனைக் கடவுளின் ஒரு சிறு பகுதியாகக் கூற மனம் இடம் கொடுக்க

வில்லை. அரி, அரன், அயன் என்ற மூவர்க்கும் மேலான பரம்பொருளாகவே பல இடங்களில் பின்வருமாறு காட்டுகிறன்—சரபங்கர் துதியாக.

"தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாது நின்ற சுடரே" என்றும் விராதனது கூற்றாக,

"வேதங்கள் அறைகின்ற
உலகெங்கும் விரிந்தன உன்
பாதங்கள் இவையென்னில்
படிவங்கள் எப்படியோ"

என்று 'பாரளவும் ஓரடி வைத்து ஓரடியும் பாருடுத்த நீரளவும், செல்ல நிமிர்ந்த' இறைவனடிப் பெருமையைக் கம்பன் பேசுகிறன். கவந்தனது கூற்றாகக் கம்பன்,

'காண்பார்க்கும் காணப்படு பொருட்கும் கண்ணாகிப்
பூண்பாய் போல் நிற்றியாய்
யாதொன்றும் பூணுதாய்
மாண்பால் உவகை வயிற்றெளித்து
வாங்குதியால்
ஆண்பாலோ! பெண்பாலோ!
அப்பாலோ! எப்பாலோ!

என்று இராமனின் பரம்பொருள் தன்மையைக் கூறுகிறர். இராம இலக்குவர்களைக் காணும் சுக்ரீவன் இராமனது மானுடத் தோற்றத்தினுள் நின்ற பரம்பொருள் தன்மையை வியந்து,

"ஆறுகொள் சடிலத்தானும் அயனும்
என்றிவர்களாதி
வேறுள குழுவை யெல்லாம் மானுடம்
வென்றதன்றே"

என்று பேசுகிறன். இராவணனிடம் அனுமன் கூற்றாக,

"மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர்
மும்மைத்தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன்,
கைவில்லேந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து
தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்
பும் விட்டு அயோத்தி வந்தான்"

என்று இராமன் மும்மூர்த்தியும் ஒருசேர அமைந்த உருவினன் என்பதனைக் கம்பன் தெளிவாக்குகிறன்.

"மானுடன் தோள் வலியெடுத்துத்
தேரை உதிர்த்து
ஓர் வில்லோடும் பிடித்துக் கொள்வன்
சிறை"

என்றெல்லாம் விரிவுரையாற்றிப் போர் தொடுத்த இராவணன், 'மூவர்க்கும் தலைவனுகி அறத்தை முற்றும் காவதற்குப் பிறந்து நின்று காகுத்த வேடம் காட்டுகின்ற' ஐயனின் தன்மையினை முற்றிலும் உணர்ந்து,

"சிவனே அல்லன் நான்முகனல்லன்
திருமாலாம்
அவனே அல்லன் மெய்வரமெல்லாம்
அடுகின்றன்
தவனே என்னின் செய்து முடிக்கும்
தரமல்லன்
இவனேதான் அவ்வேத முதற்
காரணன்..."

என்று இராமனது பரம்பொருள் இயல்பைப் பேசுவதாகக் கம்பன் குறிப்பான். எவ்விதம் வெண்காந்தட் கிழங்கை உரித்தால் உள்ளொன்று மில்லாது அமைகிறதோ, அவ்விதம் அமைபவன் இறைவனை இராமன் என்ற மாபெரும் தத்துவத்தைக் கம்பன் அடிக்கடி பேசுவான்.

வான்மீகர் தம் பாத்திரங்களைப் பேசவிட்டிருக்கும் முறைக்கும் கம்பன் பேசவைத்திருக்கும் முறைக்கும் பெருத்த மாறுபாடு உண்டு. தாரை, அகலிகை, கைகேயி, சூர்ப்பநகை ஆகியோரின் குணநலன்களைத் தமிழ்ப் பண்புக்கு ஏற்றவகையில் யாரும் குறை கூருவண்ணம் மாற்றி அமைத்த பெருமை கம்பனைச்சாரும். கம்பன் வான்மீகத்திலிருந்து செய்த மாறுதல்களில் சில வான்மீகத்தின் முரண்களைப்போக்குவன. வேறுசில, பாத்திரங்களின் குணக்குறைகளைத் தீர்ப்பன. மற்றும் சில இராமகாதையின் கடவுள் தன்மையை அதிகரிப்பன. இவ்வாறு கம்பன் இயற்றிய காவியம் தொட்ட தொட்ட இடமெல்லாம் தெய்வபக்தியை ஊட்டுவதாய்ப் பரவசப்படுத்தி மனிதப்பண்புகளை மறவாதிருக்கச் செய்வதாய் அமைந்துள்ளது.

இலக்கணமுறையில் வழிநூலெனப்படினும் இலக்கியச் சிறப்பில் முதல் நூலாகவே கருதத்தக்க சீர்மை உடையது. கற்பனை நிறைவிலும் சொல் நயத்திலும் பொருட்செறிவிலும் இதற்கிணை இதுவே எனினும் ஆதிகவி வான்மீகியைக் கம்பன் மறக்கவில்லை. தனக்கு முதல் நூல் வான்மீகமே என்பதைக் கம்பன்,

"தேவபாடையில் இக் கதை செய்தவர்
மூவரானவர் தம்முளும் முந்திய
நாவினர் உரையின்படி நான் தமிழ்ப்
பாவினல் இதைப் பாடிய பண்பு
அரோ!"

எனும் அடிகளால் அடக்கத்துடன் விளக்குகிறன். இங்ஙனம் வான்மீகத்தை அடிப்படையாகக் கொண்ட கம்பன் பல இடங்களிலும் இதனை மாற்றியும், புதியனவற்றைப் புகுத்தியும் இருப்பது தமிழர் பண்பாட்டிற்கு அதனை ஏற்புடையதாகச் செய்யமட்டுமேயாகும்.

கம்பருக்கு முன்பே சங்க இலக்கியங்கள் தொட்டு இராமன் சரிதம் பேசப்பட்டு வந்திருக்கிறது. புறநானூற்றில்,

"கடுந்தேர் இராமன் உடன் புணர்
சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய
ஞான்று
நிலம்சேர் மதரணி கண்ட குரங்கின்,
செம்முகம் பெருங்கிளை"

என்ற அடிகளும், அகநானூற்றில்,

"வெவ்வேல் கவுரியர் தொன்முது
கோடி
முழங்கு இரும் பௌவம் இரங்கும்
முன் துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு
அவித்த
பல்வீழ் ஆலம்"

என்ற அடிகளும், சிலப்பதிகாரத்தில்

"தாதை ஏவலின் மாதுடன் போகி
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்"

என்றும்,

"சோவரணும் போர்மடியத் தொல்
இலங்கை கட்டழித்த
சேவகன் சீர் கேளாத செவியென்ன
செவியே"

என்றும் வரும் அடிகளும், மணிமேகலையில்,

"மீட்சி என்பது இராமன் வென்றான்
என
மாட்சியில் இராவணன் தோற்றமை
மதித்தல்"

என்று வருவதும் இராமன் வரலாற்றைக் கூறுவனவாம்.

ஆழ்வார்களின் பிரபந்தங்களில் நம்மாழ்வார், "கற்பார் இராமனை யல்லால் மற்றும் கற்பரோ" என்றும், 'தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே' என்றும் அறைகூவி தயரதன் பெற்ற மரகத மணித்தடத்தை ஏத்துகிறார். தொண்டரடிப்பொடியாழ்வார் 'சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவனாவான்' என சூளுரைக்கிறார். திருப்பாணாழ்வார் 'இலங்கைக் கிறைவன் தலைபத்துதிர ஓட்டி ஓர் வெங்கணை உய்த்தவன்' என்று அரங்கனைப் பாடுகின்றார். குலசேகரப் பெருமான் 'பாராளும் படர் செல்வம் பரதன் நம்பிக்கே அருளி ஆரா அன்பு இளையவனோடு அருங்கானமடைந்தவன்' என்று பாராட்டுகின்றார். திருப்பணித் திருடன் திருமங்கை மன்னன்,

"வெங்கண் விறல் விராதன் உகவிற்
குனித்த
விண்ணவர்கோன் தாளணைவீர்'

என வழிவகுக்கிறார். சந்தம் பொலியும் பாமாலையும், கந்தம் பொலியும் பூமாலையும் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாள் ஆண்டாள், 'தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான்' என்று அழைக்கிறாள். திருமழிசையாழ்வார், "கல்லாதவர் இலங்கைக் கட்டழித்த காகுத்தனல்லொரு தெய்வம் யானிலேன்" என்று பெருமிதத்துடன் முழங்குகிறார்.

சைவ சமயக்குரவர் நால்வரில் சுந்தரர் "திண்தேர் நெடுவீதி இலங்கையர்கோன் திறள் தோள் இருபதும் தெறித்தருளி', என்றும், திருநாவுக்கரசர், "வரைகள் ஒத்தே உயர்ந்த மணிமுடி அரக்கர்கோன் விரைய முற்ற மீண்டமால்" என்றும், சம்பந்தர் பெருமான் 'எறியார் கடல்சூழ் இலங்கைக்கோன் தன்னை முறியார் தடக்கை அடர்த்த மூர்த்தி' எனவும் பாராட்டுதல் கருதற்குரியது. பிற்காலத்தில் அருணாசலக் கவிராயர் ராமநாடக கீர்த்தனைகளை எழுதி அழியாப் புகழ் பெற்றார்.

வடமொழியில் வான்மீகி ராமாயணம் தவிர காயத்ரி ராமாயணம், ஸப்தரிஷி ராமாயணம், அத்யாத்ம ராமாயணம், ஆனந்த ராமாயணம், அத்புத ராமாயணம் போன்றவையும் பவபூதியின் மஹாவீர சரித்ரம், உத்தர ராம சரித்ரம், போஜராஜனின் 'போஜ சம்பு', ஹனுமானின் மஹாநாடகம், பாஸ கவியின் அனர்க்க ராகவம், காளிதாஸரின் ரகுவம்சம் ஆகியவையும் இராமன் கதையை கூறுவன. கன்னடத்தில், 'குவேம்பு' என்பவர் ராமாயண தர்சனமும், மலையாளத்தில் எழுத்தச்சன் என்பவரின் ராமன் கதையும், ஹிந்தியில் துளஸி ராமாயணமும், தெலுங்கில் கீர்த்தனை ரூபமாக தியாகராஜஸ்வாமிகளின் தியாகராஜ ராமாயணமும், மராட்டியில் மதுகுல்கரின் "கீதா ராமாயணமும்" புகழ்மிக்கனவாம். இவை தவிர தமிழிலக்கிய வரிசையில் மேலும் ஒட்டக்கூத்தர் ஒரு இராமாயணம் பாடியதாகவும் வரலாறு உண்டு. இராமாயணம் வெண்பாக்களாகவும் சங்கம் மருவிய காலத்தில் இருந்திருக்கிறது. அது முற்றிலும் அழிந்துபட்டு சில பாடல்களே எஞ்சியுள்ளன. ஸ்ரீ நாராயணபட்டர் தம் நாராயணீயத்தில் இருபது வடமொழிப் பாடல்களில் ராமாயணத்தை அடக்கி ஒவ்வொன்றாக ஸ்ரீ குருவாயூரப்பனிடம் பாடிக்காட்ட பகவான் சரியென்று ஆமோதித்திருக்கிறார். ஆழ்வார் பாடங்களில் வரும் ஸ்ரீராம சரித்திரத்தை திரட்டி "பாசுரப்படி ராமாயணம்" என வைஷ்ணவர்கள் பலர் பாராயணம் செய்தும் வருகிறார்கள்.



## ஆலயங்களில் பூஜைகள் தடைப்பட்டால்...?

இன்று நாட்டில் மழை வளம் குன்றியிருப்பதற்கும், நீதி நேர்மை அழிவதற்கும், களவும் பொய்யும் மிகுவதற்கும், இவற்றால் மக்கள் அனைவரும் சொல்லொணாத் துயரங்கள் அனுபவிப்பதற்கும் காரணம் திருக்கோயில்களில் சரிவரப் பூஜைகள் நடைபெற இயலாமல் இருப்பதே ஆகும்.

திருக்கோயிலில் பூஜைகள் தடைப்பட்டால் அதனால் நாட்டிற்கும், அரசிற்கும் தீங்கே விளையும் என்று திருமூலர் ஒரு பாடலில் குறித்தருளுகின்றார்.

"முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குகள்; மாரி வளங்குன்றும்;
கன்னங் களவு மிகுந்திருக்கும் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத்தான்.

— திருமூலர்.

திரு. கே. பாலசுப்பிரமணியம் M.A., B.Ed.
தச்சநல்லூர்.

# மாயனே! வடமதுரை மைந்தனே!

"திருவும் சத்யமும், தர்மமும் நிலைபெறும் பொருட்டு, பல மாயச் செயல்களை புரிந்த மாயனை—காலத்தை வென்ற தன் புகழ் நிலைபெற்று இருக்கும் வண்ணம் வடமதுரையில் தோன்றிய எம் தலைவனை— புனிதப் பெருநீர் வெள்ளமாய்ப் பெருக்கெடுத்து வளைந்து தெளிந்து வரும் யமுனைத் துறைவனை-கோகுலத்தில் தோன்றி, ஆயர்களின் துன்ப துயரங்களை நீக்க வந்த், இருளைப் போக்கவல்ல தீப ஜோதியை—தன் பிறப்பினால், தான் வளர்ந்ததினால் தன் தாய்க்குப் பெருமையும் மேன்மையும் உண்டாக்கிய தாமோதரனை—

தூய மனம் மலர, தூய மலர்களை கொய்து, அவன் திருப் பாதக் கமலங்களில் தூவித் தொழுது, வாயார மனமார 'அவன்' திருநாமத்தைப் பாடுகின்றோம். புகழ்பாடும் 'அவன்' புகழை மனதார சிந்திக்க சிந்திக்க எங்கள் மனங்களிலே—

நின் திருவருள் ஞானம் தோன்றுவதற்கு, முன் செய்த பிழைகளும், இனிமேல் அறியாமல், தெரியாமல் செய்யும், நேரிடத்தகும் பாவங்களும்,தீயினில் விழுந்த தூசு தும்புகளைப் போல கருகித் தீய்ந்துவிடும்.

எனவே, சீரும் சிறப்புமிக்க செல்வங்களே! தோழிகளே! பகவானின் 'திருநாமத்தையே' கூறுவோமாக!" என்று ஆண்டாள் தன் தோழிகளைக் கூட்டி எடுத்துரைக்கிறாள்.

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை,
ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கை,
தாயைக் குடல் விளக்கம் செய்ததா மோதரனை,
தூயோமாய் வந்து நாம் தூமலர்தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க,
போய பிழையும் புகு தருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.

"இந்நோன்பிலே இறங்கி இறைவனைத் தியானித்து அடைய விரும்புகின்றோமே!...அதற்கு இடையூறாக இருப்பவைகள்...? நாம் நெடு நாட்களாகச் செல்துவந்த பிழைகள் பல இருக்கின்றவே! அப் பிழைகளை ஒருருவெடுத்து நம்மை இறைவனிடம் சேர்க்காதவாறு இடையிலே நின்று இடையூறு செய்கின்றவே...அதைப் போக்க என்ன வழி.

"நாமம் பல சொல்லி நாரா யணா என்று
நாம் அங் கையால் தொழுதும் நல்நெஞ்சே—வாம் அருவி
மண்ணுலகம் உண்டு உமிழ்ந்த வண்டு அறையும் தண்துழாய்
கண்ணனையே காண்கநம் கண்."

என்று பேயாழ்வார், "நாராயணா" என்னும் நாமத்தைச் சொல்ல வேண்டுமென்றும், அகக்கண்ணாலும் புறக்கண்ணாலும் 'ஸ்ரீ கண்ணனையே' காணவேண்டும் என்றும் எடுத்து இயம்புகிறார்.

எனவே பகவானின் "திருநாமத்தை"— தியானித்தோமானால்—சிந்தித்துக் கொண்டே இருந்தோமானால் நேற்று செய்த பிழைகளும், இன்று அறியாமல் செய்யும் குற்றங்களும், நாளை தெரியாமல் செய்யப்போகும் பாவங்களும்—ஆகிய அனைத்துக் கல்லாப் பிழையும், கருதாப் பிழையும், கசிந்துருகி நில்லாப் பிழையும், நினையாப் பிழையும், நின் நான் கிரண்டெழுத்தைச் சொல்லாப் பிழையும், துதியாப் பிழையும், தொழாப்பிழையும் எல்லாப் பிழைகளும் நெருப்பில் இட்ட பஞ்சுபோல தீய்ந்துவிடும்.

ஆகவே பகவானின் "நாமம்" ஒன்றே-துன்ப-துக்க-துயர-தொல்லை-கவலை-வேதனை-சோதனைகளை வராமல் காக்கும் மருந்து ஆகும்,

எத்தனையோ தாங்கொணாத சோதனைகளும் வேதனைகளும் சந்தித்து,இறுதியில் உலகப் பெருஞ்சாதனை புரிந்த நம் மகாத்மா காந்தி அடிகளும், உண்டாலும், உலவினாலும், உண்ணா நோன்பு இருந்தாலும், உறங்கினாலும், "ராம் ராம்" என்று தியானித்துக் கொண்டே இருந்தார் அன்றோ!

பகவான் மாயச் செயல்கள் பல மேற்கொண்டார், ஏன்? உலக உயிர்கள் உய்யும் பொருட்டுத்தான், நமக்காகத்தான். யார் கட்டுப்பாட்டிற்கும் கட்டுப்படாத கண்ணன், யசோதையின் பிரியத்துக்குக் கட்டுப்பட்டதால், அவன் இடுப்பில் பிணைத்தத் தாம்புக் கயிற்றினால் ஏற்பட்ட தழும்பினால்—'தாமோதரன்' என்ற திருநாமத்திற்கு உள்ளானான். இதிலிருந்து நாம் அறிவது என்னே? யார் ஒருவர் உண்மையான-ஆழமான-பிரியம்-பற்றுதல்-பக்தியுடன்-சிந்திக்கிறார்களோ-அவர்களுக்கு 'பகவான்' கட்டுப்படுவான் என்பது அறிகிறோம் அன்றோ!

(ஸ்ரீ ஹரி — சென்னை-71)

# துயில் அமர்ந்த வித்தே!

“திருவே உருவான எம் தோழியே! எம் பாவையே! வைகறை ஒளியை எதிர்நோக்கித் தம் சிறகுகளை அடித்துக் கொண்டுப் பறவையினங்கள் கூவத் தொடங்கிவிட்டன. பறவைகளுக்கெல்லாம் அரசனான கருடனின் தலைவனான ஸ்ரீமந் நாராயண மூர்த்தி கோயில் கொண்டுள்ள திருச்சந்நதியில், வெண் சங்கினை ஒலிக்க வைத்து எல்லோரையும் கூவி அழைக்கும் பேரொலியைக் கேட்கவில்லையோ?

தத்தித் தவழ்ந்த சின்னக் கண்ணனை வாரி, விஷம் கலந்தத் தன் முலைப் பாலை ஊட்டிட, பால் பருகுவதுபோல் பாவனைப் புரிந்து, தன்னைக் கொல்லவந்த அரக்கியின் உயிரையே-நஞ்சுடன் முலைப்பால் வழியாகப் பருகி அவளை மாய்த்து விட்டு அவள் ஸ்தனங்களில் தவழ்ந்த—

கம்சனால் தன்னைக் கொல்ல மேலும் ஏவப்பட்டு வந்த சகடாசுரனை-பெரும் வண்டிச் சக்கர ரூபத்தில் வந்த அசுரனை-அழிந்தொழியும் வண்ணம் சலங்கைகள் கொஞ்சும் தன் சின்னம் சிறு காலால் உதைத்துத் தள்ளிய—

திருப்பாற் கடலில் அனந்த சயனத்தில்-யோக நித்திரையில் அமர்ந்து இருக்கும், லோகத்தின் தர்மம், ஸத்யம், கருணை, அருள் ஆகியவற்றிற்கு ‘விதை’யாகிய பகவானையே—

உள்ளத்தில் அமரச் செய்து-காமம், கோபம், ஆசை, பற்று ஆகியவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்ட முனிவர்களும்; மனதை அடக்கி யொடுக்கி யோகாப்பியாஸம் செய்கின்ற யோகிகளும் மெள்ள எழுந்து அமர்ந்து “ஹரி ஹரி” என்று கூறுகின்ற பேரொளியானது, காற்றில் தவழ்ந்து வந்து உன் உள்ளத்தினுள்ளே புகுந்து குளிரவைக்கவில்லையோ? எம் தோழியே! எழுந்திராய்!” என்று ஸ்ரீ ஆண்டாள் தன் தோழியை எழுப்புகிறாள்.

“புள்ளும் சிலம்பினகாண்; புள்ளரையின் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?
பிள்ளாய்! எழுந்திராய், பேய்முலை நஞ்சுண்டு,
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி

வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

இப்பாசுரம் முதல், பத்து பாசுரங்கள் வரை, முன்னே எழுந்தவர்கள், பின்னே துயில் கொண்டுள்ளோர்களை எழுப்புகின்றனர். ஆகவே இந்த பத்துப் பாசுரங்களை-திருப்பள்ளி எழுச்சிப் பாசுரங்கள் என்று கூறலாம்.

முதலில் ஒருத்தியை எழுப்புகிறாள். அவளுக்கோ உறக்க மயக்கம். “பொழுது புலர்ந்து விட்டதா என்ன?” வினவினாள் கண்களை திறக்காமலேயே.

“பறவைகள் சிறகடித்துக் பறக்கின்றனவே! அறிவாயே!” முதல் அடையாளம் கூறினாள் விடியற்காலைக்கு எழுப்பியவள். அவளோ, திறக்கவில்லை கயல் விழிகளை.

“கோவிலில் திருப்பள்ளி எழுச்சிக்கு அறிகுறியாக சங்கின் நாதம் முழங்குகின்றதே, செவியில் விழவில்லையா?” என்று இரண்டாம் அடையாளமாக ஆலயங்களில் முழங்கும் வைகறைச் சங்கின் ஒலியைப்பற்றிக் கூறினாள். அவளோ, திறக்கவில்லை மான் விழிகளை.

“ஞானிகளும், யோகிகளும் வைகறை அறிந்து, துயிலெழுந்து அமர்ந்து ‘ஹரி ஹரி’ என்று கூறுகிறார்களே—அது கூடவா உன் காதில் கேட்கவில்லை?” என்று மூன்றாவது அடையாளமாக, ஞானிகளும் முனிவர்களும் யோகிகளும் பகவானையே தியானிக்கும் சப்தத்தை எடுத்துக்காட்டுகிறாள்.

“பிள்ளாய் எழுந்திராய்” என்பது ஓர் திறவுகோலாகும். மனமானது ஆசை, பாசம், பற்று, பிரியம் என்று ஒரு மயக்கத்தில் மூழ்கி உறங்கிக் கிடக்கிறது, அவ்வாறு உலக மாயை-உலக மயக்கத்தில் அமிழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கும் ஆன்மாவை-அறிவை-மனதை-புத்தியை-கவனத்தை-தட்டி எழுப்பி, பேரொளியாய், பிரகாசமாய்ப் பிரகாசிக்கும் இறைவனை-பகவானைத் தரிசிக்க வைக்க முயற்சிக்க வைக்கிறாள் ஸ்ரீ ஆண்டாள். ஏன்? உலகில் துன்பம் இல்லாமல், நோய் நொடி இல்லாமல் வாழ வேண்டும். இன்பம் ஆனந்தம், மகிழ்ச்சி, ஆரோக்கியம், அமைதி, நிம்மதியுடன் வாழ வேண்டும். தன் மனதைத் தட்டி எழிப்புவதுபோலவே உலக உயிர்கள் அனைத்தையும் தட்டி எழுப்புகிறாள் சூடிக் கொடுத்தச் சுடர்க் கொடியாள்.

(ஸ்ரீ ஹரி — சென்னை-71)

# ஸ்ரீ குலசேகராழ்வார்

திரு. எஸ். லக்ஷ்மி நரசிம்மன்.
விஜயவாடா.

ஸ்ரீய: பதியாய் ஸ்ரீ வைகுண்ட நிகேதனுய் எழுந்தருளி இருக்கும் ஸர்வேஸ்வரன் தன் அவதாரங்களாலும் இப் பூவுலகம் திருந்தாமையை கண்டு நித்ய சூரிகளில் சிலரை இப் பூவுலகில் தோற்றிவித்து, மாந்தர்களை ரக்ஷிக்கவும், அறம், பொருள், இன்பம், பக்தி மார்க்கம் முதலியவைகளைப் போதிக்கவும் நியமித்தார். அவர்கள் எம்பெருமானின் ஆணைக்கு இணங்க இப் பூவுலகில் ஆழ்வார்களாக அவதரித்து, மக்களுக்கு "பரத்வத்தையும்" அவனை பக்தி மூலம் அடைய வேண்டிய வழியையும் போதித்தும், மக்கள் உஜ்ஜீவிக்க வழிவகுத்துத் தந்தார்கள். அவர்களில் ஸ்ரீ குலசேகராழ்வார் திவ்ய வைபவத்தை இங்குக் காண்போம்.

இவர் சேர நாட்டில் கொல்லி நகர் என்கிற படை வீட்டில் அரச வம்சத்தில் மாசி மாஸம் புனர்பூசம் நக்ஷத்திரத்தில் ஸ்ரீ கௌஸ்துவ அம்சமாக அவதரித்தார்.

தக்க வயதில் எல்லாக் கலைகளையும், சாஸ்திரங்களையும் கற்று, அடியார்களையும் ஆராதித்து வந்தார். "இவர் ராமாயண" காலக்ஷேபம் கேட்கையில், அதிலேயே லயித்து ஒன்றி விடுவாராம். இப்படியாக ஒரு நாள், மாயம் வல்லவர்களாய் அதர்ம யுத்தம் பண்ணுவர்களாய் உள்ள ராக்ஷஸர்களாயுள்ள பதிலாயிரம் அரக்கர்களோடு, தர்ம யுத்தம் செய்யும் தர்மாத்வான ஸ்ரீராமன் ஒருவர் மட்டும் போர் புரியும் கட்டத்தைக் காலக்ஷேபம் சொல்பவர் சொல்லிக் கொண்டு வந்தார். இதைக் கேட்டு வந்த ஆழ்வார், பெருமாளுக்கு துணையில்லையே என்று, தன் சேனைகளைக்கூட்டிக்கொண்டு புறப்பட்டார் என்பது வரலாறு ஆகும்.

இவ்வாறு பல சமயங்களில் தன் நிலை அறியாது பகவானிடம் ஒன்றி அவனை மனத்தில் சதா நினைத்து வந்தார் என்பது சான்ருக இருக்கிறது.

சில காலம் சென்ற பிறகு ராஜ்யத்தைத் துறந்து திருவரங்கம் சென்று, அரங்கநாதனை வழிபட்டு "பெருமாள் திருமொழி" என்ற பிரபந்தத்தையும், "முகுந்தமாலா" என்ற வடமொழி ஸ்தோத்திரத்தையும் மக்கள் உஜ்ஜீவிக்க அருளினுர்

இவர் தன்னை தேவகியாக எண்ணிக்கொண்டு, யசோதைக்கு ஏற்பட்ட கிருஷ்ணனின் லீலா விநோதம் தனக்கு ஏற்படவில்லையே என ஏங்கி இந்த பாசுரத்தைப் பாடியுள்ளார்.

" முழுதும் வெண்ணெயளைந்து
தொட்டுண்ணும்
முகிழிளஞ் சிறுத்தாமரைக் கையும்,
எழில் கொள் தாம்பு கொண்டடிப்ப
பதற் கொள்கும் நிலையும்
வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும்
அழுகையும் அஞ்சி நோக்குமந்
நோக்குமணி கொள்
செஞ்சிறு வாய் நெளிப்பதுவும்
தொழுகையும் இவை கண்ட
யசோதை தொல்லை
யின்பத்திறுதி கண்டாளே."

மேலும் ஸ்ரீ முகுந்த மாலையில்:

ஸ்ரீவல்ல பேதி வரதேதி தயாபரேதி
பக்த ப்ரேயதி பவலுண்டநகோவி
தேதி |
நாதேதி நாகசயநேதி நிகந்நிவாஸே
த்யாலாபநம் பிரதி தினம் குருமே
முகுந்த ||

என்று திருவரங்கத்து எம்பிரான் ஸ்ரீ அரங்கநாதரை பற்றி 40 ஸ்லோகங்களில் ஸ்தோதிரம் செய்து உள்ளார்.

இவ்வாறு பக்தியின் மார்க்கத்தை உலகுக்கு உணர்வித்த ஆழ்வாரை போற்றி அவர்தம் புகழ்பாடுவோமாக.

" குஷ்ய தே யஸ்ய நகரே ரங்கயாத்ரா
திநெதிநெ,
தமஹம் சிரஸா வந்தே ராஜாநம்-
குலசேகரம்"

*

## திருக்கோயிலில் திருப்பணி செய்தோர் பெறும் சிவ புண்ணியம்

" புல்லினுல் ஐந்து கோடி புது மண்ணுல் பத்து கோடி
செல்லுமா ஞாலம் தன்னில் செங்கல்லால் நூறு கோடி
அல்லியங் கோதை கேளாய், கரனுறை ஆலயத்தைச்
கல்லினுல் செய்வித்தோர்கள் கயிலைவிட்டு அகலாரன்றே!"

— இப்பாடலில் திருக்கோயில் திருப்பணியினைக் கருங்கல்லினுல் செய்வித்தவர்கள் கயிலை விட்டு நீங்கார் என்று கூறப்பட்டுள்ளது. முற்காலத்தில் தாம் ஈட்டிய பெருஞ் செல்வத்தில் பெரும் பங்கினைத் திருக்கோயில் திருப்பணிக்கே செலவிட்டு இறையருள் பெற்றனர்.

கே. பாலசுப்பிரமணியன் B.A., B.Ed.-தச்சநல்லூர்.

20-ம் பக்கம் தொடர்ச்சி)

மேற்கூறப்பெற்ற இருவருக்கும் கொடுத்ததாகத் தெரிகிறது. மேலும், ஊரிலுள்ளவர்கள் மற்றும் வெளியார்கள் கொண்டுவரும் சமையல் பொருள்களைக் கொண்டு தயாரிக்கப்படும் பிரஸாதங்களிலிருந்து கிடைக்கும் வருமானம் கோயில் சிலவுக்கும் குத்தகைக்காரர் பணத்தைக் கொடுப்பதற்கும் பயன்படுத்தப்பட்டு வந்தது என்றும், நிர்வாகத்தினரின் கணக்கில் இது கொண்டுவரப்படவில்லை என்றும் தெரிகிறது.

கோவிந்தராஜசுவாமி தமது இரு நாச்சியார்களுடனும் வைகாசி, ஆனி உற்சவத்தின் விடாயாற்றித் திருநாளின்போது இக்கோவிலுக்கு எழுந்தருளி, திருமஞ்சனம், திருவாராதனை கண்டதனால் இக்கோயிலுக்கு ஓர் உயர்வு ஏற்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. இன்றும்கூட மார்கழி மாதம் ஒரு நாள் இராமர் கோயிலுக்கு எதிர்ப்புறம் அமைந்துள்ள இராமச்சந்திர தீர்த்தத்தின் கரையின் மீது கோவிந்தராஜ சுவாமி எழுந்தருளுகின்றார்.

திருப்பதி நரசிங்கபுரம் சித்தாமு செட்டி, பிராந்தூர் மண்டலம் அய்யங்கார், கோயில் கேள்வி வடதிரு வேங்கட ஜீயர், பச்சைலிங்கு செட்டி ஆகியோரால் பிரஸாதங்களுக்கென நிவந்தங்கள் நிறுவப்பட்டன. உத்தண்டராயர் உலகப்பன் என்பவரால் அத்யயனோத்ஸவம் ஏற்பாடு செய்யப்பட்டது. கி. பி. 1532 இல் ராமபட்டரின் நிவந்தத்தின்படி, ஸ்ரீ ரகுநாத சுவாமி ஒரு நாள் திருப்பள்ளி ஓடத் திருநாள் கண்டுள்ளார். கி.பி. 1547 இல் தாள்ளபாக்கம் சிறு திருமலை அய்யங்கார் ஒரு நிவந்தம் வழங்கியுள்ளார். கி. பி. 1540-இல் யதிராஜ ஜீயரால் கோடைத்திருநாள் துவக்கப் பெற்றது. கி. பி. 1545-இல் மலை நின்றபட்டர் குமாரரான வேங்கடத் துறைவார் என்பவரின் சாசனத்தில் பெரிய இரகுநாத சுவாமியின் பிரம் மோற்சவமும் தேர்த் திருநாளும் குறிப்பிடப்படுகின்றன.



சிறிய சேஷவாகனத்தில் உற்சவர்

1817—18 இல் கர்ப்பகிரகத்தின் மேல் ஒரு விமானம் கட்டப்பெற்று குடமுழுக்கும் செய்யப்பட்டது.

மேலே குறிப்பிட்ட 'சவால்-ஜவாப் பட்டி' யிலும் சரி, அதே சமயத்தில் (கி.பி. 1818-19) தயாரிக்கப்பட்ட "பைமாயிஷ் கணக்கு' என்பதிலும் சரி, இக்கோயிலின் பெயர் ஸ்ரீ கோதண்டராமர் கோயில் என்றே காணப்பெறுகிறது.

**கோயில்:**

சந்நிதித் தெருவில் நுழைந்தவுடன் நம் கண்ணில்படுவது, கருங்கல்லினாலான ஜயஸ்தம்பம் போன்ற தொருதூண். தெருவின் இருமருங்கிலும் பெரும்பாலும் கோவில் அர்ச்சகர்கள் வசிக்கும் இல்லங்கள். ஒரு வேளை அவை முற்காலத்தில் மண்டபங்களாக இருந்திருக்கக் கூடும். தெருவின் தெற்குச்சாரியில் கோயிலுக்கு அருகில் உயர்ந்த வாகன மண்டபம் ஒன்று உள்ளது. கோயில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது.

இன்று, தெருவின் தரைமட்டத்திற்குக் கீழாகவே கோயில் இருக்கின்றது. இராஜ கோபுரத்தின் வழியாகக் கோயிலினுள் நுழைகின்றோம்.



அனுமந்த வாகனத்தில் உற்சவர்

ஏழு கலசங்களுடன் கூடிய, மூன்று நிலைக் கோபுரம் பதினொரு அடி உயரமுள்ள நுழைவாயிலின் மேற்தளத்திற்குமேல் இருபத்தொன்பது அடி உயரம்-வலது புறச் சுவரின் உட்பக்கத்தில் கதவு பொருத்தப்பட்டிருக்கும் இடத்தில் வராகம் மற்றும் தலைகீழாக உள்ள வாள் ஆகியவற்றுடன் கூடிய விஜயநகரச் சின்னம் தென்படுகிறது. அண்மையில் இது கி. பி. 1951-இல் பழுது பார்க்கப்பட்டுப் புதுப்பிக்கப் பெற்றது.

இராஜகோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றதும் பரந்து கிடக்கும் திறந்தவெளி முற்றத்தில் அடியெடுத்து வைக்கிறோம். பரபரப்பும் சந்தடியும் நிறைந்த ஊரின் நடுவில் அமைந்திருக்கும் இக் கோவிலின் உள்ளே நுழைந்தவுடனேயே, சொற்களிலே விவரிக்க முடியாத அமைதியையும் தூய்மையையும் நாம் உணர முடிகின்றது.

கோயிலின் மதிற்சுவரை ஒட்டினாற் போல் உட்புறத்தில் பூத்துக் குலுங்கும் அழகிய நந்தவனம் ஒன்று



ஸர்வ பூபால வாகனத்தில் உற்சவர்

வடக்கு; கிழக்கு, தெற்குப் பக்கங்களில் அமைந்து கோயிலின் எழிலைப் பெருக்குகிறது.

கோபுரத்திற்குச் சற்றே கிழக்கில் பலிபீடமும் உயர்ந்தோங்கி ஒளியுடன் திகழும் கொடிமரமும் காணப்படுகின்றன.

வெளிப் பிராகாரத்தை வலமாக வரும் போது, முதலில் கோபுரத்தை ஒட்டிய அறைகள் இருப்பதைக் காணுகின்றோம். இப்போது அங்கே பிரசாதங்கள் விற்கப்படுகின்றன. அடுத்து, தெற்கு நோக்கியதொரு மண்டபம். இப்போது அங்கே சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெற்று வருகின்றன. அதை அடுத்து சற்றே முன்புறமாக, படிக்கட்டுகளுடன் கூடிய ஒரு நடைக்கிணறு கோயிலுக்கு நீர் வழங்குகின்றது.

வெளிப்பிராகாரத்தில் மேலும் கிழக்காகச் சென்றால், வடதுபுரத்தில் விஷ்வக்ஸேனரின் கோட்டத்தின் மேற்குப் பகுதியும் கருவறை மீது எழுப்பப்பட்டுள்ள விமானமும் தென்படுகின்றன. கருவறை விமானம் இரு தள அமைப்புடையது. இரண்டாவது தளத்திற்கு மேல், அஞ்சலி ஹஸ்தத்துடன் கூடிய கருடனின் உருவங்கள் நான்கு மூலைகளிலும் இருக்கின்றன. உருண்டை வடிவச் சிகரத்தின் மீதுள்ளது ஒரே கலசம். கிழக்குப் பக்கம் சென்று மேற்கே திரும்பியதும், வெளிப்பிராகாரத்தின் தென்கிழக்கு மூலையில் கோயில் மடைப் பள்ளி அமைந்துள்ளது. அதற்கருகில் எதிர்த்தாற் போல் இராமானுஜரின் கோட்டத்து மேற்பகுதி தெரிகின்றது. மேலே மேற்குப்பக்கமாகச் சென்றால், நான்கு தூண்களுடனும் விமானத்துடனும் கூடிய அர்ச்சகர் மண்டபம் என்று அழைக்கப்பெறும் உயர்ந்த ஊஞ்சல் மண்டபமும் அதற்குச் சில அடிகள் தள்ளி மேற்கே நான்கு தூண்களையுடைய பொக்கசத்தார் மண்டபம் எனப்பெறும் சாதாரண மண்டபம் ஒன்றும் உள்ளன.

விசாலமான வெளிப் பிராகாரத்திலிருந்தே மகா மண்டபத்தினுள் செல்வதற்கு வடக்கிலும் தெற்கிலும் இரண்டு திறப்புகள் இருக்கின்றன. எனினும், நாம் முறையாகக் கொடிமரத்தைச் சுற்றிக் கொண்டு, மேற்குத் திசையிலிருந்தே மகா மண்டபத்தினுள் நுழையலாம். அறுபது அடிச் சதுரவடிவில் உள்ள இதில் நான்கு வரிசைகளில் ஒவ்வொன்றிலும் ஐந்து ஆக—இருபது தூண்கள் உள்ளன. தூண்களின் தலையுறுப்புகள் விஜய நகர பாணியில் அமைந்திருப்பவை. அவற்றின் பக்கங்களின் மீது லக்ஷ்மி விஷ்ணு, கிருஷ்ணர், நரசிம்மர், பரசுராமர், வேணுகோபாலன் போன்ற அழகிய தெய்வத் திருவுருவங்கள் செதுக்கப்பெற்றுள்ளன.

கருடாழ்வாரின் சந்நிதி கிழக்கு நோக்கி மகாமண்டபத்தின் மேற்கு விளிம்பின் மையத்தில் இருக்கின்றது. கூப்பிய இருகைகளுடன் காட்சிதரும் கருடன் அழகியதொரு சிற்பவடிவம்.

இடது புறமாக முகமண்டபத்தினுள் நுழைவாயிலின் இருபுறத்திலும் வெளிச்சுவரில் விஜயநகர அரசச் சின்னம் பொறிக்கப்பட்டிருப்பதை மீண்டும் கண்ணுறுகின்றோம்.

முகமண்டபத்தில் நான்கு தூண்கள் உள்ளன. இவற்றிலுள்ள சிற்பங்களுள் நம்மைப் பெரிதும் கவர்பவை லக்ஷ்மி நாராயணர், விஷ்ணு, யோக நரசிம்மர், லக்ஷ்மி மற்றும் கோவர்த்தன கிரிதாரியின் கோலத்திலுள்ள கிருஷ்ணர் ஆகியனவாம். எல்லாமே விஜய நகரப் பாணியினைப் பிரதிபலிப்பவை.

முகமண்டபத்திலிருந்து வலமாக உள்பிராகாரம் அமைந்திருக்கின்றது. முதலில் தெற்கு நோக்கி இருப்பது விஷ்வக்ஸேனர் அல்லது சேனை முதலியார் அமர்ந்திருக்கும் கோட்டம். அவரை வணங்கி விட்டு உயரே சந்நிதிக்குச் செல்லலாம்.

அந்தராளம் எனப்படும் அர்த்த மண்டபமும் கருவறையும் முகமண்டபத்தின் தரைமட்டத்தை விட ஐந்தரை அடி உயரமுள்ள நிலைக்களத்தின் மீது அமைக்கப்பட்டுள்ளன. அந்தராளத்தின் நுழைவாயிலின் இருமருங்கிலும் உள்ள துவாரபாலகர்களின் சிலைகள் நம் கவனத்தைக் கவருகின்றன. கருவறை இருபதே முக்கால் அடிச் சதுரவடிவிலும் அந்தராளம் பதினைந்தேமுக்கால் அடி நீளமுள்ளதாகவும் அமைந்துள்ளன.

கருவறையில் இராமர், சீதை இலக்குமணன் ஆகியோர் சிலைவடிவில் கண்கவர் எழிலுடன், நின்ற திருக்கோலத்தில் மேற்கு நோக்கி சேவை சாதித்தருளுகின்றனர். இராமரின் வலது பக்கத்தில் சீதையும் இடது பக்கத்தில் இலக்குமணனும் காட்சி தருகின்றனர். இராமரின் வலக்கையில் அம்பும் இடக்கையில் வில்லும் உள்ளன. தலையில் கரண்டக வடிவக் கிரீடம், காதுகளில் மகர குண்டலங்கள், பூணூல், கழுத்தணிகள், மேற்கைகளில் வளையங்கள், சிங்க முகப்புடன் கூடிய இடையணி, முழு மார்புக்கவசம், கால்களில் நூபு

ரங்கள், சீதையின் இடது கையில் கருங்குவளை மலர், வலது கை தொங்கவிடப்பட்டுள்ளது. இலக்குமணன் திருவுருவும் இராமனுடைய தைப்போலவே அமைந்துள்ளது.

பஞ்சலோகத்தினுலான இராமர், சீதை, இலக்குமணன் ஆகியோரின் உற்சவ விக்கிரகங்கள் கொள்ளை அழகு கொண்டு பார்ப்போரைப் பரவசப்படுத்துகின்றன. கிருஷ்ணன் உற்சவமூர்த்தி ஒன்றும் இருக்கின்றது. கீழே இருக்கும் செம்பிலான விஷ்வக்ஸேனர், ஆஞ்சநேயர், நம்மாழ்வார், பாஷ்யக்காரர் படிமங்களும் நேர்த்தியானவை.

கோதண்டராமனின் புகழைக் குறிக்கும் திருநாமங்களைச் சொல்லி அருச்சனை செய்து, கற்பூர ஆரத்தி காட்டும் போது, கருணையே வடிவான சீதா, ராமர்களின் அருட்பார்வையில் நனைந்து நம்மையே சற்றுநேரம் நாம் மறந்து நிற்கின்றோம். இக்கோயிலின் அர்ச்சகர்கள் நெல்லூர்ப் பகுதியிலுள்ள உதயகிரியிலிருந்து வந்தவர்கள். இவர்கள் இக்கோவிலில் மட்டுமே அர்ச்சகம் செய்பவர்கள்.

தீர்த்தம், பிரஸாதம் பெற்றுக் கொண்டு கீழே இறங்கி உள் பிராகாரத்தை வலம் வரும் போது, வடக்குப் பக்கத்தில் ஆறும், கிழக்குப் பக்கத்தில் இரண்டும், தெற்குப் பக்கத்தில் ஆறுமாக மொத்தம் பதினன்கு தூண்கள் இருப்பதைக்கவனிக்கிறோம். இவற்றின் தலையுறுப்புகளும் விஜய நகர பாணியிலேயே அமைந்தவை. உள் பிராகாரத்தின் சுவருக்கும் கருவறையின் அதிஷ்டானத்திற்கும் மூன்று புறமும் நான்கடி இடைவெளி உள்ளது.

தெற்கு உள் பிராகாரத்தின் மேற்குக் கோடியில் பெரிது ஒன்றும் சிறிது ஒன்றுமாக இராமானுஜரின் உருவச் சிலைகள் உள்ள கோட்டம் அமைந்திருக்கின்றது.



கருடவாகனம்

முகமண்டபத்திலிருந்து வெளியே வரும் போது இருப்பது, அதை ஒட்டினற் போல் மேற்கு நோக்கியுள்ள ஆஸ்தான மண்டபம்.

கோயிலைச் சுற்றிக் கிழக்கு மேற்காக 345 அடிகளும், வடக்குத் தெற்காக 174 அடிகளும் 15 அடிகள் உயரமும் உள்ள மதிற்சுவர்கள் அமைந்திருக்கின்றன.

மஹந்துக்களின் திருப்பணிகள் :

கி.பி. 1843இலிருந்து கி.பி. 1932 வரை திருமலை-திருப்பதிக் கோவில்களின் நிருவாகத்தினை நடத்தி வந்த ஹாத்தீராம்ஜீ மடத்தைச் சேர்ந்த மஹந்துக்களும் இக்கோயிலுக்குத் திருப்பணிகள் செய்துள்ளனர்.

கி.பி. 1864இல் நிருவாகத்தை மேற்கொண்ட தர்மாதாஸ், கருவறையிலுள்ள மூலமூர்த்திகளுக்கு 'ஜடிபந்தனம்' *(உறுதியாக **அமைத்தல்**)* செய்வித்தார். பொன் முலாம் பூசப் பெற்ற கொடி மரத்தை நிறுவினர். இராமர், சீதை, இலக்குமணர், சேனுதிபதி ஆகிய மூர்த்திகளுக்குத் தங்க முலாம் பூசிய வெள்ளிக்கிரீடங்கள், இராமருக்கும் இலக்குமணருக்கும் வில் மற்றும் அம்புகள், பிராதான இராமருக்கு வெள்ளியிலான பெரியதொரு வில் ஆகியவற்றையும் செய்வித்தார். காவல் வாசலின் பின்புறம் ஒரு கல்மண்டபமும், தேருக்கு அருகில் மற்றொரு மண்டபமும் அவரால் கட்டப்பெற்றன.

கி.பி. 1880இல் பதவிக்கு வந்த பகவான்தாஸ் காலத்தில், இராமர் உற்சவ மூர்த்திக்கு பொன்முலாம் பூசிய ஒரு மகர தோரணம், வைரங்கள் இழைத்த இரு கைகளுக்குமான மூடு வளையங்கள், ஒரு 'கலிகித்



திருத்தேர்

துராயி', மணிகள் இழைத்த தங்க இடையணி, மகர கண்டி என்னும் மணிகள் இழைத்த கழுத்தணி, மணி கள் பதித்த இரு பதக்கங்கள் இல் லிழைத்த 'ராக்கடி' (பெண்களின் தலையின் பின்புறம் அணியப்படுவது) தங்கக்காசு மாலைகள் இரண்டு ஆகி யவை செய்யப்பெற்றன.

கி.பி. 1900இல் ஆறுவது மஹந்து வாகப் பதவியேற்றவுடன் இராமர், சீதை, இலக்குமணர் ஆகியோரின் கைகளுக்கு தங்கக் கவசங்கள் செய்த பிரயாகதாஸ், மூலத்தான இராமரின் வெள்ளிக் கவசத்தைப் பழுதுபார்த் துப் புதுப்பித்ததோடு, மூலத்தான சீதைக்கும் இலக்குமணருக்கும் புதிய வெள்ளிக் கவசங்களும், உற்சவமூர்த் திகளின் கைகளுக்கும் பாதங்களுக்கும் தங்கக் கவசங்கள், சின்ன மணியுடன் கூடிய வில், அம்புகள் மற்றும் சில ஆபரணங்களும் செய்தார். கரு வறையிலிருந்து உள் பிரதக்ஷிணம் வெளிப்பிரகாரம் ஆகியவற்றின் தரையின் மீது கோபுரவாசல் வரை கருங்கற்பலகைகளைப் பதிக்கவும் ஏற் பாடு செய்தார்.

**உற்சவங்கள்**

ஒவ்வொரு சனிக்கிழமையிலும் புனர்வசு நட்சத்திரத்தன்றும் திரு வீதி உலா உண்டு. அமாவாசை நாட் களில் மூலவருக்குப் பூலங்கி (மல ராடை)ச் சேவை. இதற்கான மலர் கள் உள்ளூர் வாசிகளால் அளிக்கப் படுகின்றன.

கோவிந்தராஜ சுவாமி புஷ்கரிணி யில் தை மாதத்தில் பௌர்ணமி யன்று முடிவுறும் தெப்போற்சவத் தின் போது முதல் நாள் இராமர் தெப்பத்தில் காட்சி தருகின்றார்.

மாசி மாதத்தில் காலையிலும் மாலை யிலும் திருவீதி உலாவுடன் கூடிய ஒன்பது நாள் பிரம்மோற்சவம் மிகுந்த வைபவத்துடன் நடைபெறு கின்றது. ஐந்தாவது நாள் கரு டோற்சவம்; எட்டாவது நாள் தேர்த் திருநாள்.

தெற்கு மாடத் தெருவில் வைகா னஸ ஆகமத்தை நிறுவிய விகனஸ மகரிஷிக்கு ஒரு கோயில் உள்ளது.

சந்நிதித்தெருவிற்கு எதிராக கிழக்கு நோக்கிய ஆஞ்சநேயர்கோவில். நல்ல காத்திரமான அநுமன் கரு வறையைச் சுற்றித் திறந்த வெளிச் சுற்றும் உள்ளது. இக்கோயிலும், இதன் பின்புறமுள்ள இராமச்சந்திர தீர்த்தமும் திருச்சானூர் சபையார் களைப் சேர்ந்தனவாயிருந்ததாகச் சொல்லப்படுகிறது.

இத்தீர்த்தத்தின் கரையின் மீது கோவிந்தராஜசுவாமி ஆலயத்தில் உறையும் ஆண்டாள் நாச்சியார் மார்கழி மாதம், பொங்கலுக்கு முன் னதாக ஏழு நாள்கள் தினந்தோறும் விடியற்காலையில் 'கட்ட உத்ஸவம்' எனப்படும் நீரோட்டோற்சவத் திற்காக எழுந்தருளி, ஒவ்வொரு நாள் மாலையிலும் ஊரின் பல்வேறு தெருக்களின் வழியாக திருவீதி உலா வருகின்றாள்.

**கோதண்டராமனின் பேரழகு:**

இந்த இராமனின், ஆண்களும் மயங்கும் பேரழகில் ஈடுபட்டோ என்னவோ, தாள்ளப்பாக்கம் சின்ன திருமலை அய்யங்கார் மாளகௌள இராகத்தில் இயற்றிய பாட்டு ஒன்று கிடைத்துள்ளது:

'' ஸ்ரீபதி புரநாயக ஜய
சிந்திதா பீஷ்ட தாயக

உன்னதோன்னத விக்ரஹ
தாஸோபரிஸ்தானுக்ரஹ
ஸந்நுதாமர ஸுக்ரஹ
ஸாம பத பரிக்ரஹ
ஜானகீப்ரிய காரக
சிவஸாதி தாகில தாரக
மானுஷா ஹிதமாரக
மாம காசு நிவாரக

ஸ்ரீவேங்கடநாத ரூபகஸம்
சித ரகுகுல தீபக
பாவ ஸந் தோஷப்ராபக அ
பங்க பஞ்சுள சாபக. ''

நாமும் அவருடன் சேர்ந்து கொண்டு,

'இலக்குமணனோடு இரவும் நன்பகலும்
வடிவினை இல்லாச் சங்கு தங்கு
முன்கை நங்கை
மலர்க்குழலாள் சீதையும் தானும்'

ஆக, பக்தர்களின் கடுந்துயர் துடைத்து, அந்தமில் இன்பம் பயக் கும் 'நடையில் நின்றுயிர் நாயகன்' கோதண்டராமனைக் கரம் குவித்து வணங்கி, நன்மையும் செல்வமும் நாளும் பெறலாமே!



ஆதிசங்கரர் இந்த பாரத புண்ய பூமியில் அவதரித்த காலம் கி. பி. 788-820 என்று சரித்திர நிபுணர்கள் கூறுகிறுர்கள். அவர் ஹிந்து சமூகத்திற்கு ஆற்றிய பெருந் தொண்டு ஹிந்து மதத்தின் அஸ்திவாரத்தை பலப்படுத்தியது. பௌத்த நாஸ்திகாதி மதங்கள் ஹிந்து மதத்தை குழப்பிக் கொண்டிருந்த காலம் அது. முப்பத்திரண்டு வயதே வாழ்ந்த சங்கரரின் சாதனைகள் தான் என்னே! வடக்கே இமயத்திலுள்ள பத்ரிநாத் காஷ்மீர் முதல் தென் கோடி வரையில் பரதகண்டம் பூராவும் பாத யாத்திரையாகச் சென்று மதத்திற்கு எதிர் பிரசாரம் செய்தவர்களை எல்லாம் வாக் சாமர்த்தியத்தாலேயே வென்று ஆங்காங்கே மடங்களை ஸ்தாபித்து நமது சமயம் வகுக்க வேண்டாமா? ஞானியான காரணத்தால் அவர் அவர்களுக்காகவே ஷண்மதம் என்பதை உருவாக்கிக் கொடுத்தார். அதாவது கணபதியை தெய்வமாகக் கொள்வது காணபத்யம்; சிவனை வழிபடுதல் சைவம்; சக்தியை வழிபடுதல் சாக்தம்; குமரக்கடவுளை வழிபடுதல் கௌமாரம்; விஷ்ணுவை ஆராதிப்பது வைணவம்; சூரியனே தெய்வமென்பது சௌரம். பாமரன் இந்த ஆறு வழிபாட்டு முறைகளில் ஏதேனும் ஒன்றை அணுகி உயர்நிலை அடையலாம். நிற்க.

இனி முத்து ஸ்வாமி தீக்ஷதரின் வரலாற்றைக் கவனிப்போமாக. இவர் வாழ்ந்தது கி. பி. 1775 முதல் 1835 வரை. ஸம்ஸ்கிருத பாண்டித்யம் முருகன் பால் 30க்கும் மேல்; ராமர், கிருஷ்ணர் கீர்த்தனைகள் உள்பட விஷ்ணுவின் பேரில் சுமார் 60க்கும் மேல்; நவக்ரஹங்கள் உள்பட சூரியன் பால் 9.

இனி ஷண்மத தத்வங்களை தனித் தனியாக ஆராய்ந்து, ஸ்ரீ முத்து ஸ்வாமி தீக்ஷதரின் கீர்த்தனைகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்போமாக. தீக்ஷதரின் மேதா விலாசத்தை வெளிப் படுத்துவோமாக.

முதலில் காணபத்யத்தை எடுத்துக் கொள்வோம். ஓம் எனும் பிரணவ மூர்த்தியான கணபதி மனித உடலில் அடிவயிற்றின்கீழ் மிக உஷ்ணமாக உள்ள சுஷூம்னு நாடியாக இருக்கிறுர் என்றும் இதன் வழியாக குண்டலினியை எழுப்பி மேலேயுள்ள

# ஷண்மதமும் முத்துஸ்வாமி தீக்ஷதரும்

தொடர்ச்சியாக வளர வழி வகை செய்தார். பிரம்ம சூத்திரம், உபநிஷத்துக்கள், பகவத் கீதை, ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமம் முதலியவைகளுக்கு பாஷ்யங்கள் எழுதினுர். அவர் நடத்திய சித்துக்கள்தான் எவ்வளவு ஆச்சரியமானவை. கனகதாரா ஸ்தோத்ரத்தினுல் ஏழை அந்தணப் பெண்மணியின் வீட்டில் தங்க நெல்லிக்கனிகளை வர்ஷிக்க வைத்தார். தாயின் சௌகர்யத்திற்காக பூர்ணு நதியையே வீட்டின் பக்கத்தில் கொண்டு வந்தார். நர்மதை நதியின் வெள்ளத்தை தடுத்து நிறுத்தினுர். ஏன் கூடுவிட்டு கூடும் பாய்ந்தார் அல்லவா! அப்பேர்ப்பட்ட மஹானுக்குத்தான் பாமர ஜனங்களின் பால் என்ன கருணை! வேதபாஷ்யங்களையும் உபநிஷத்துக்களையும் அவர்களால் புரிந்துகொள்ள முடியுமா? அவர்களுக்கு சுலபமான பக்தி மார்க்கத்தால் ஞானத்தை வளர்க்கச் செய்து பரம்பொருளை அடைய வழி உடையவர். வேத சாஸ்திரம் மந்திரம் பயின்றவர். சங்கீத ஞானத்தில் மேதை. காசியில் கங்கை நதியில் வீணை கிடைத்த பாக்யம் பெற்றவர். திருத்தணி முருகப் பெருமான் அருளால் அவன் சன்னதியிலேயே முதல் பாட்டை அமைத்து ஸ்வர ராகப்படுத்தி அப்பாட்டினுள் மந்திர சாஸ்திரங்களிலும் புராண இதிஹாசங்களிலும் சொல்லப்பட்ட கருத்துக்களை எல்லாம் எடுத்துச் சொன்னவர். இவர் இயற்றிய கீர்த்தனைகளையும் ஷண்மதத்திற்கு ஏற்றவாறு பிரித்துக் கொள்ள முடியும். விநயகரை வழி பட்டு சுமார் 24 கீர்த்தனைகள்; சிவனை வழிபட்டு ஸ்தல க்ருதிகள் உள்பட சுமார் 100க்கும் மேல்; சக்தியை வழிபட்டு 150க்கும் மேல்;

---

திரு. எஸ். பார்த்தசாரதி,
[B.Sc., B.Sc.(Tech.)]
போனுர்.

---

ஸஹஸ்ர தள கமலத்துடன் ஐக்யப் படுத்தினுல் மனிதன் தியான மார்க்கத்தில் பிரம்மாநந்தத்தை அடைகிறுன் என்கிறது யோக சாஸ்திரம். இதை ஒட்டியே குட்டிக்கொள்வதும் தோப்புக்கரணம் போடுவதும் வழக்கமாகிவிட்டது என்கிறுர்கள். மஹாராஷ்டிரத்திலுள்ள பூனு நகரின் சமீபத்திலிருக்கும் மயூரேசம் என்கிற ஸ்தலத்திலிருக்கும் 'ஸ்வானந்தேசர்' என்கிற விசேஷப் பெயருடன் வீற்றிருக்கும் கணபதி காணபத்யக்காரர்களுக்கு பிரதான க்ஷேத்திரம். இங்கிருக்கும் யோகீந்திர மடம் மஹா கணபதி மந்திரங்களை வெளியிடுகிறது. ஆவணி மாத சுக்ல பக்ஷ சதுர்த்தியில் கணேச பூஜைக்கு அர்த்தமுள்ள இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. புஷ்பத்தாலும், பத்திரத்தாலும், விசேஷமாக அருகம்புல்லாலும் மூன்று விதமாக அர்ச்சனை செய்யப்படுவது விநயகர் ஒருவர் தான். இந்த கணேச பூஜை மஹா ராஷ்டிரத்தில் கோலா

கலமாகக் கொண்டாடப்படுகிறது. தென்ஞட்டிலும் பிள்ளேயாருக்காகவே உச்சி பிள்ளேயார் கோயில், பிள்ளேயார் பட்டி, திருவலஞ்சுழி போன்ற திருத்தலங்கள் இருக்கின்றன. விஞயகர் யாருடைய உதவியையும் கோரியதாக புராணங்களில் கிடையாது. ஆஞல் இவருடைய உதவியை நாடாதவரே கிடையாது எனலாம். இடையூறுகளேப் போக்கும் விஞயகர், அல்லவா! திருபுர சம்ஹாரத்தின் போது தேர் முறிந்து இடையூறு ஏற்பட, சிவபிரானே விஞயகரை பூஜை செய்து அசுரர்களே வென்ருர். பண்டாசுர அரக்கனே வெல்ல தேவி விஞயரை நாட, அரக்கஞல் உண்டாக்கப்பட்ட விக்ன யந்திரங்களே அகற்றி, தேவிக்கு ஜயத்தை அளித்தார். ஹேரம்ப மூர்த்தியாக ராமர் உபாசித்து இராவண சம்ஹாரம் செய்தார். அர்க்க கணபதியாக சூரியன் வழிபடுகிருர். விஞயகரை வழிபடாததால், பிரம்மாவிற்கு சிருஷ்டி ஆரம்பத்தில் பேய் பிசாசுகளாகவே ஏற்பட்டுப் போகவே, பிறகு கணபதிக்குறிய பூஜைகளேச் செய்து சிருஷ்டியில் இறங்கிஞர். இராவணனிடமிருந்து அவன் கைலேயிலிருந்து கொண்டு வந்த ஆத்மலிங்கத்தை தந்திரமாக வாங்கிக் கொண்டாரல்லவா! வேத வியாஸர் மஹாபாரதம் எழுத விஞயகரைத்தானே நாடிஞர். எங்கேயாவது கோயில் கட்ட எண்ணிஞல் ஹிந்துக்களுக்கு முதலில் தோன்றும் எண்ணம் விஞயகர் தானே! ஏன் வீடு தெருக்குத்தாக (தெருவின் மூட்டப்பட்ட முனே) அமைந்துவிட்டால், வெளிச்சுவரில் அவரைத் தானே வைத்து சாந்தி அடைகிருேம். இன்னும் எழுதிக்கொண்டே போகாலாம்.

இனி முத்து ஸ்வாமி தீக்ஷிதரின் விஞயகக்கீர்த்தனேகளேப் பார்ப்போம். கணபதி மூலாதார சக்ரத்தில் இருப்பவர், 600 சுவாசங்களுக்கு அதிபதி என்று பொருள்படும்படி ஸ்ரீராகத்தில் "ஸ்ரீ மூலாதார சக்ர விஞயக" என்ற உருப்படியில் சொல்லியிருக்கிருர். ஆவணி மாத சதுர்த்தியில் பூஜை நடப்பதை "பாத்ரபத மாஸ சதுர்த்யாம் பிராம்மணுதி பூஜிதம்" என்று சாமரம் ராக "சித்தி விஞயகம்" என்ற பாட்டில் குறிப்பிடுகிருர். விஞயகர் பஞ்சபூதத்தாலாகிய பிரபஞ்சத்தினுடைய ஸ்ருஷ்டிக்கு காரணமானவர் என்று பிலஹரி ராக "பஞ்ச மாதங்க முக கணபதிஞ" கிருதியில் வர்ணிக்கிருர். "ஸ்ரீ கணேசாத்பரம்" என்கிற கீர்த்தனேயில் பூமி முதல் சிவன் வரை 36 தத்துவங்களே தன்னுள் கொண்டவர் என்று கணபதியை "ஷட்த்ரிம்சத் தத்வஸ்வரூபிண:" என்ற பதங்களிஞல் விளக்குகிருர். சூரியன், சந்திரன், அக்னி இவர்களே முக்கண்ணஞக உடையவர் என்று "ரவி, சசி, வன்ஹி நேத்ர" என்கிற சொற்களால் வேக வாஹினி ராக "விஞயக"வில் உரைக்கிருர். அதே ராகத்தில் பாடப்பட்ட "கஜானனயுதம்" என்ற மற்ெருரு பாட்டில் குஞ்ஜராஸுரனே வதைத்ததையும் தர்ம, அர்த்த காம மோக்ஷம் என்கிற புருஷார்த்தங்களே தருபவர் என்றும் கணபதியை வழிபடுகிருர். எல்லோராலும் பாடப்படுகிற ஹம்சத்வனி ராக "வாதாபி கணீபதிம்" என்கிற கீர்த்தனேயில் ப்ரணவ ஸ்வரூபத்துடன் கூடிய துதிக்கையுடையவர் என்று பொருள்படுகிற வடமொழிச் சொற்கள் வருகின்றன. பல கீர்த்தனேகளில் சிவன், விஷ்ணு, பிரம்மா, இந்திரன், இராமர், கிருஷ்ணர், பூத கணங்கள் இவர்களால் பூஜிக்கப்பட்டவர் என்கிருர் தீக்ஷிதர். மற்றும் விஞயகருடைய உதவியை நாடியவர்களேயும் கவிஞர் விடவில்லே. தோடி ராக "மஹா கணபதிம்" என்கிற உருப்படியில், "த்ரிபுரவதார்த்தம் சிவேன த்ரயம்பகேன அர்ச்சிதம்" என்று சிவன் திருபுர சம்ஹாரத்திற்காக விஞயகரை நாடியதைக் குறிப்பிடுகிருர். முருகன் வள்ளியை மணக்க யானே முகத்தோன் உதவியை உபயோகித்ததை பேகள ராக "வல்லபா நாயகஸ்ய" பாட்டில் "வள்ளி விவாஹ காரணஸ்ய" என்று சொல்கிருர். வராளி ராக "லம்போதராய" என்கிற உருப்படியில் 'கும்பஜ பூஜிதாய' என்று அகஸ்தியர் வணங்கியதை உரைக்கிருர். சுந்தரமூர்த்தி நாயஞரின் வரலாற்றுடன் இணேந்த திருவாரூர் கமலாலயக் கரையில் அமர்ந்திருக்கும் விஞயகரை கௌள ராக "ஸ்ரீமஹா கணபதிரவதுமாம்" என்கிற கீர்த்தனேயில் "சுவர்ண கர்ஷண விக்னராஜ:" என்கிற ஒரே வார்த்தையிஞலேயே தீக்ஷிதர் வர்ணித்திருக்கிருர். இவரின் காணுபத்ய சாஹித்யங்களின் அர்த்தத்தை தெரிந்து கொண்டாலே மனது பேரானந்தம் அடைகிறது.

அடுத்ததாக "சைவம்" என்கிற சிவனுடைய வழிபாட்டை ஆராய்வோம். சிவன் என்ருலே ஹிமயமலேயின் கைலயங்கிரிதான் ஞாபகம் வரும். அங்கு சிவன் பூதகணங்களுடனும், ரிஷபம், சிம்ஹம், பார்வதி, விஞயகர், சுப்பிரமண்யருடன் வசிப்பதாகவும், உடுக்கை, மான், நாகம், அக்னி, புலித்தோல், மண்டை ஓடு, முக்கண், கங்கை இவைகளே தரித்தவராகவும் சைவர்கள் போற்றுகிருர்கள். ரிஷபமும் சிம்மமும் அவர் முன்னிலேயில் பகையில்லாமல் இருப்பதால் ஈஸ்வர ஆராதனே அஹிம்சாமுறையாலேயே அனுஷ்டிக்கப்பட வேண்டுமென்ருகிறது. இதஞலேதான் சைவமா, அசைவமா என்ற கேள்வியும் உண்டாயிற்று. அதே போல் மானும் அக்னிமுன் அமைதியாக இருப்பதால் சிவபக்தர்கள் பயத்தை அகற்ற வேண்டுமென்பது கருத்து. சிவன் அருவம், உருவம், அருஉருவம் ஆக மூன்றுவிதமாகக் காணப்படுகிருர். அருவம் என்பது உருவமேயில்லாமல் ஞானிகள் மனத்திஞலேயே தியானித்து யோக மஹிமையால் பரப்பிரம்மத்தை தெரிந்து கொள்ளல். உருவம் என்பது பூரண உருவமில்லாமலும், அருவமாக இல்லாமலும்

இருக்கும் லிங்க வடிவம். இந்தலிங்க பாவம்தான் கோயில்களில் பெரும் பாலும் பிரதிஷ்டை செய்து ஆரா தனை செய்யப்படுவது. சாளக்கிரமம் என்கிற இயற்கைக் கல் வீட்டிலேயே பூஜை செய்யப்படும் அருஉருவ வடிவ மாகும். சிவனுக்கு தத்புருஷம், அகோரம், வாமம், சத்யோஜாதம், ஈசானம் என்று ஐந்து முகங்கள் உண்டு. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களையும் விடாது செய்கிறார். விபூதி, ருத்ராக்ஷம், பஞ்சாக்ஷரம் இவைகளில் பிரீதியுடையவர். கிருஷ்ண யஜுர் வேதத்தின் மத்தியில் சொல்லப்படும் ஸ்ரீருத்ரம், சமகம் மஹா மந்திரங்கள் சிவனை சந்தோஷிக்கச் செய்யும் மஹா மந்திரங்களே. கோபமான உருவமாக ருத்ரராகவும், சாந்த உருவமாக தக்ஷிணாமூர்த்தியாகவும் வர்ணிக்கப்படுபவர். ஆன்மாக்கள் இறைவனிடத்தில் கூட்டி உய்விக்கும் நிமித்தம் கட்டப்பட்டிருக்கும் ஆலயங்களில் சிவன் பஞ்ச பூதங்களாக மண் உருவத்தில் காஞ்சியிலும், நெருப்பாக திருவண்ணாமலையிலும், காற்றாக காளஹஸ்தியிலும், நீராக திருவானைக்காவிலும், ஆகாசமாக சிதம்பரத்திலும் காட்சி அளிப்பதாக ஐதீகம். அதே மாதிரியாக திருவாரூரில் ஜனித்ததினாலும், திருவண்ணாமலையை நினைப்பதாலும், சிதம்பரத்தை காண்பதாலும், காசியில் மரணத்தினாலும் சிவபிரான் முக்தியளிக்கிறார். மற்றும் காரியார்த்த காரணமாக சிவன் பல உருவங்களை எடுத்திருக்கிறார். தக்ஷனை கொல்வதற்காக வீரபத்திரர்; தாருகாவனத்து ரிஷிகளின் கர்வத்தை அடக்க பிக்ஷாடனர் உருவம்; மார்க்கண்டேயனுக்காக யமனைக் கொல்ல காலசம்ஹாரமூர்த்தி; பதஞ்சலி வ்யாக்ரபாத மஹா ரிஷிகளுக்காக ஆனந்த நடனமாடும் நடராஜ மூர்த்தி; பிரம்மாவை தண்டிக்க பைரவமூர்த்தி. தமிழ் நாட்டிலே அப்பர், சுந்தரர், திருஞான சம்பந்தர், மாணிக்க வாசகர் இவர்கள் பாடிய தேவாரம், திருவாசகம் தமிழ்த்திருமறைகளாகப் போற்றப் படுகின்றன. ஆதலால், விபூதியை உடலில் தரித்து, உருத்ராக்ஷ மணிமாலை அணிந்து, நமசிவாய என்னும் பஞ்சாக்ஷர மந்திரத்தை மனிதன் ஜபிக்க அவனுக்கு சிவன் அருள்பாலிக்கிறான் என்பது வழிவழியாக வந்த மரபு.

இனி சிவதத்துவத்திற்கு ஒப்பாக முத்துஸ்வாமி தீக்ஷிதரின் வடமொழி பாக்கள் எவ்வாறு அமைந்திருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டுவோமாக. 100க்கும் அதிகமாக சிவன் பாடல்கள் இருந்த போதிலும் முத்துக்கள் போன்று சிலவற்றை ஆராய்வோம். "ஸதாசிவேன" என்கிற ஸிந்து ராமக்ரியா ராக கீர்த்தனையில் 'ஸத்யோஜாதாதி பஞ்சமுகேன' என்று சிவனுக்கு ஸத்யோஜாதம் முதலிய ஐந்து தொழில்களை 'ஸ்ருஷ்டியாதி பஞ்சக்ருத்யகரணேன' என்கிற வார்த்தைகளைக் கொண்டு 'தியாகராஜேன ஸம்ரக்ஷிதோகம்' என்கிற உருப்படியில் வர்ணிக்கிறார். ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூபயம், ஸாயுஜ்யம் என்கிற நால்வகைமோக்ஷத்தைஅளிப்பவர் சிவபிரான் என்கிற கருத்தை பல பாக்களில் "ஸாயுஜ்யாதி முக்திப்ரதம்", "ஸாலோகாதிகைவல்யப்ரத சரித்ரம்", முதலிய வார்த்தைகளால் சொல்கிறார். பேகட ராக "தியாக ராஜாய நமஸ்தே"வில் "முனி பக்ஷி மிருக கீடாதி முக்திப் ப்ரத" என்று சிவனை முனிவர்கள், பக்ஷிகள், மிருகங்கள், பூச்சிகள் எல்லாவற்றிற்கும் முக்தி அளிக்க வல்லவர் என்று போற்றுகிறார். சிவனுடைய கோபத்தினால் தக்ஷ சம்ஹாரத்திற்காக தோன்றிய வீரபத்ரரைப்பற்றி ருத்ர ப்ரியாராகத்தில் "ருத்ரகோப ஜாத வீரபத்ரமாஸ்ரயே" என்று ஒரு தனி கீர்த்தனையையே இயற்றி இருக்கிறார். அதே போல் பைரவ ராக "கால பைரவம்" என்கிற உருப்படி பிரம்ம தண்டனைக்காக அவதரித்த காலபைரவரைப் பற்றியது. பிக்ஷாடன திருக் கோலத்தை ஆரபி ராக "மாரகோடி கோடி லாவண்யாய" பாட்டில் 'தாருகாவன தபோதனதருணி மோஹாகார பிக்ஷாடனவேஷதர" என்கிற சொற்களால் காரணத்துடன் விவரிக்கிறார். இதே கீர்த்தனையில் "விபூதி ருத்ராக்ஷாபிமான" என்று சிவன் விபூதி ருத்ராக்ஷம் இவைகளில் பிரியமானவர் என்றும் "பரசு, மிருக, அக்னி, கபாலடமருகம் ததான" என்று கோடாரி, மான், நெருப்பு, கபாலம் உடுக்கை இவைகளை தரிப்பதை ரூபவர்ணனையாக்குகிறார். கங்கையையும் பிறைச் சந்திரனையும் ஏற்றிருப்பது பல பாக்களில் காண்கிறோம். இதே போல் திரிபுர சம்ஹாரத்தையும் பல சாஹித்யங்களில் "தரஹாஸ திருபுராதிஹரணம்"

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப் படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேயார்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

'புராந்தகம்'' ''திருபுராதிஹரம்'' முதலிய சொற்களால் குறிப்பிடு கிறார். மௌன ரூபியான தக்ஷிணா மூர்த்தியை வேதங்களினால் போற்றப் பட்டவர் என்றும், ஆலமரத்தடியில் வசிப்பவர் என்றும், பிரணவ முத் திரையுடன் கூடியவர் என்றும் அவர் பொருட்டு இயற்றிய பேனத்யுதி ராக ''ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திம்'' கீர்த்தனை வர்ணிக்கிறது. இனி சிவன் பக்தர் களுக்கு உதவியதைக் காண்போம். காலனிடமிருந்து மார்க்கண்டேயனைக் காப்பாற்றியதைத் திருக்கடையூர் க்ஷேத்ரத்தின் பேரிலேயே மனோஹரி ராக ''சங்கர அபிராமி மனோஹரம்'' என்கிற உருப்படியில் ''பக்த மார்க் கண்டேயாயுஷ்பதம் பயங்கர கோர ரூப யமநிக்ரஹானுக்ரஹம்'' என்று குறிப்பிடுகிறார். அர்ஜுனனுக்கு பாசுபதாஸ்திரம் வழங்கியதை சுமத் யுதி ராக ''நீலாசலநாதம்'' கீர்த்தனை யின் சரணத்தில் ''அர்ஜுன தபோ மஹித பாசுபதாஸ்த்ர ப்ரதம்'' என்று காண்பிக்கிறார். கானட ராக ''ஸ்ரீ மாத்ருபூதம்'' உருப்படியில் 'வைஸ்ய ஜாதி ஸ்திரிவேஷதரணம்' என்று வைஸ்ய ஸ்திரீயாக மருத்துவம் பார்த்ததைச் சொல்கிறார். அடுத்த தாக சிவ க்ஷேத்ராடனம் செய்வோம். ஸாரங்கா ராக ''அருணாசல நாதம்'' கீர்த்தனையில் திருவண்ணாமலையை அக்னி க்ஷேத்ரமாகவும் நினைத்தாலே முக்தி என்பதையும் ''தேஜோமய லிங்கம்,'' 'ஸ்மரணாத்கைவல்ய ப்ரத' என்கிற வார்த்தைகள் விளக்குகின் றன. ''சிந்தயமாகந்த மூலகந்தம்'' என்கிற பைரவி ராக பாட்டில் காஞ்சி ஏகாம்பர நாதர் ஸ்தல விருக்ஷமாகிய மாமரத்தின்கீழ் இருப்பவர் என்றும், ப்ருதிவிலிங்கமென்றும் குறிப்பிடு கிறார். காஞ்சிநாதனை ''ப்ரகடித காமகோடி பீட ஸ்திதம்'' என்று மற் றொரு கீர்த்தனையில் கூறி காமகோடி பீடத்தின் பிராகசத்தை வெளிப் படுத்துகிறார். வாயு க்ஷேத்ரமாகிய காளஹஸ்தியைப் பற்றி, ''ஸ்ரீ காள ஹஸ்தீச'' என்கிற உருப்படியை செய் திருக்கிறார். இதில் ''சமீரா்கார'' என்பது வாயுரூபம் என்று அர்த்தம். அதோடு ''ஹீனஜாதி கிராதகேன பூஜித கீர்த்தே'' என்று கண்ணப்ப நாயனார் பூஜித்ததால் கீர்த்தியடைந் தவர் என்று குறிப்பிடுகிறார். யமுனா கல்யாணி ராகத்தில் பாடிய ''ஜம்பூ பதேமாம்பாஹி'' என்கிற கிருதியில் ''பர்வதஜா ப்ரார்த்திதாப்லிங்க விபோ'' என்பது மலைமகளால் கோரப் பட்டு ஜலஸ்வரூபத்தை அடைந்தார் என்று வர்ணிக்கிறது. இது திரு வானைக்காவைப்பற்றி பஞ்சபூதக்ஷேத் ரங்களின் கடைசி ஆகாசம் எனப் படும் சிதம்பரம். பதஞ்சலி வ்யாக்ர பாத முனிவர்களுக்கு திருவடி தரி சனம் தந்தவர் என்றும் தில்லை மூவா யிரம் தீக்ஷிதர்களால் பூஜை செய்யப் படுபவர் என்றும் கேதார ராக ''ஆனந்த நடன ப்ரகாசம்'' கீர்த்தனை கூறுகிறது. மற்றும் ''நவநீத (வெண்ணை) காளி பூஜிதம்'' என்று மதுரையம்பதியை ஒரு பாட்டில் வர்ணிக்கிறார். தஞ்சைமூர்த்தியை ''ராஜ ராஜேந்திர சோள ப்ரதிஷ்டி தம்'' என்கிற தலைப்புப் பாட்டினா லேயே சரித்திர வரலாற்றைப் படைக் கிறார். திருவாரூர் தியாகேசனைப் பற்றி இயற்றிய ''வீரவஸந்த தியாக ராஜ'' கிருதியில் ''ஜனனாத் கைவல்ய தாயக சரண'' என்று பிறப்பு ஏற் பட்டாலே முக்தியடையலாமென்று விளக்குகிறார். பிரசித்தி பெற்ற ராமேஸ்வரம், திருவையாறு, அகண்ட காவேரி, குளித்தலை, கும்பகோணம், திருவிடைமருதூர், மாயவரம் முத லிய க்ஷேத்ர மூர்த்திகள் பேரிலும் அர்த்த புஷ்டியுள்ள கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். இவருடைய சிவ கீர்த்தனைகளுக்கு சிகரமாக அமைந் துள்ள பதினான்கு ராகங்களைக் கொண்டு எல்லா சிறப்புகளையும் வர் ணிக்கும் ''ஸ்ரீ விஸ்வநாதம்'' என்கிற உருப்படி.

(தொடரும்)

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

அன்பை அகலாகவும், ஆர்வத்தை நெய்யாகவும், இன்பம் எந்நாளும் உருகும் சிந்தையை திரியாகவும்ஏற்றி நாரணற்கு ஞானத்தமிழால் ஞானச் சுடர் விளக்கு ஏற்றியருளினார்.

பேயாழ்வார், கடல்போன்ற நீலநிற முடைய நாதனிடம் திருமகளையும், அவனது பொன்மேனியை, சூரியனைப் போன்ற ஒளிபொருந்திய வடிவினை யும், கைகளில் சங்கும் சக்கரமும் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி கொள் கிறார்.

இம்மூன்று ஆழ்வார்களும் திருக் கோவலூரிலே மழைக்காலத்தில் ஓர் இடைக்கழியில் 'கட்டுண்டோம்; நெருக்குண்டோம்' என்ற நிலையில் இருந்தபோது எம்பெருமானும் சேர்ந்து நெருக்கும் போது யார் என்று பார்ப்பதற்குப் பொய்கையாழ்வாழ் வார் ஒரு தீபத்தை ஏற்றிப் பாடினார். அவருக்கு ஞானம் தோன்றியது.பூதத் தாழ்வார்க்கு ஞானம் முற்றிப் பக்தி வெள்ளம் தோன்றியது. பேயாழ் வார்க்கு பக்தியானது முதிர்ந்து பக வானது காட்சி பிறந்தது. அதாவது அகில உலகினையும் அவனாகவே கண்டு ஆனந்தம் கொண்டால் அன்பும் ஆர் வமும் தோன்றும். அதன் விளைவாகப் பகவானே திருக்காட்சியைக் காட்டி யருள்வார். இதே கருத்துக்கொண்டு அப்பர் பெருமானும் பாடுகின்றார்.

உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே
தகளியாக
மடம்படும் உணர்நெய் அட்டி
உயிர்எனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால்
எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி
காணலாமே.

சிற்றின்பத்தினையும் பேரின்பத்தினை யும் பகுத்துக் காட்டுகின்றார் நம்மாழ் வார்.

கண்டு கேட்டுற்று மோந்துண்டு
உழலும் ஐங்கருவி
கண்ட வின்பம் தெரிவரிய வளவில்லாச்
சிற்றின்பம்
ஒண்டொ டியாள் திருமகளும்
நீயுமே நிலாநிற்பக்
கண்ட சதிர்கண் டொழிந்தேன்
அடைந்தேனுன் திருவடியே.

எனவே திருவடிப்பேரின்பமே இவ் வாழ்நாளில் ஒருவன் பெறற்கரிய பேறாகும்.

# ஆதித்யோபஸ்தானம்

**கோ**ழியாலம் ஸ்வாமி என்று ப்ரஸித்தரான ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ரங்கராமானுஜ மஹாதேசிகன் ஆஸ்திகர்களின் அனுஷ்டான ஸௌகர்யத்துக்காக "லக்வாஹ்நிகம்" என்னும் சிறு நூலை அருளினார். அது மொழி பெயர்ப்புடன் 1973-ம் வருஷத்தில் (1) R. வெங்கடாச்சாரி (2) ஒ. ராஜகோபாலன் ஆகிய இருவரா லும் இரண்டாவது பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது.

இதில் 22-ம் பக்கம் மாத்யாஹ்நிகம் பற்றிய இடத்தில் :—

"......अनन्तरं गायत्री मुद्रास्य उपस्थानावसरे, "आ सत्येने" तिऋक्षट्कस्य, हिरण्यस्तूपऋषिः, आद्ययोस्त्रिष्टुप्, चतसृणां गायत्री जगत्युष्णिगनुष्टुभश्छन्दांसि, सविता देवता, इति न्यस्य माध्याह्निक संध्योपस्थाने विनियोगः इत्युक्त्वा अञ्जलिं बद्ध्वा;

(1) आ सत्येन......विपश्यन् ॥
(2) उद्वयंतम......त्तमम् ॥
(3) उदुत्यं जात......सूर्यम् ॥
(4) चित्रंदेवा......स्तस्थुषश्च ॥
(5) तच्चक्षु......पुरस्ताच्छुक्रमुच्चरत् ॥

इत्युक्त्वा व्योममुद्राद्वारा दक्षिणेन नेत्रेण सूर्यमवलोकयन्; "पश्येम शरदश्शतं......सूर्यं दृशे" इत्युक्त्वा, अंजलिं बद्ध्वा "यउदगा... पुनातु" इत्युच्चार्य, शेषं पूर्ववत्कृत्वा......"

என்று அச்சிடப்பட்டுள்ளது. இதிலும் ப்ரக்ருத விசார விஷயமான "तच्चक्षु..." என்னும் மந்திரம் உஷ்ணிக் சந்தஸ்ஸாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. மற்ற மந்திரங்கள் விஷயத்தில் பூர்வ க்ரந்தங்களில் உள்ளது போலவே இதிலும் குழப்பமும் தவறுதலும் இடம் பெற்றுள்ளன. ப்ரக்ருதத்துக்கு அவசியமில்லாததனால் தற்சமயம் அதைக் கவனிக்கவில்லை.

சென்னை மைலாப்பூரில் வேங்கடேசபவனத்தில் எழுந்தருளியிருந்த மகாவித்வான் M. S. ராஜகோபாலாச்சாரியர் என்பவர், "ஸ்ரீவைஷ்ணவ திநசர்யா" என்றொரு புஸ்தகத்தை எழுதினார். "விசிஷ்டாத்வைத ப்ரசாரிணீஸபா"வினால் இந்நூல் 1967-ம் வருஷம் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது. தமிழ் மொழிபெயர்ப்புடன் அச்சிடப்பட்டுள்ள இந்நூல் அனுஷ்டானபரர்களுக்கு மிகவும் உபயோகமானது. அபிநவதேசிகர் என்று பொருத்தமான விருது பெற்று விளங்கும் மஹாவித்வான் உத்தமூர் வீரராகவாசாரியர் ஸ்வாமி இதற்கு ஒரு முகவுரை எழுதிச் சிறப்பித்திருக்கிறார். இதில் 50-ம் பக்கத்தில் :- (மாத்யாந்நிக ஸந்த்யா வந்தனம்)

"......उपस्थाने आदित्योपस्थानमिति विशेषः। आसत्येनेत्यादि मन्त्राणां हिरण्यस्तूप विश्वामित्र कुत्सवसिष्ठा ऋषयः, त्रिष्टुब्गायत्री जगत्युष्णिक्त्रिष्टुभ श्छन्दांसि, आदित्यो देवता, माध्याह्निकसंध्योपस्थाने विनियोगः। आसत्येन......तच्चक्षुर्देवहितं पुरस्ताच्छुक्रमुच्चरत्" पश्येम......सूर्यं दृशे"

என்று அச்சிடப்பட்டிருக்கிறது. இதிலும் ப்ரக்ருத விசார் விஷயமான மந்திரம் உஷ்ணிக் சந்தஸ்ஸாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றைய குழப்பங்கள் முன் க்ரந்தங்களில் போலவே இதிலும் இடம் பெற்றுள்ளன.

ஸ்ரீ. உ. வே. அபிநவதேசிகர் உத்தமூர் வீரராகவாச்சாரியர் ஸ்வாமி தானே ஒரு ஆஹ்நிகம் எழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். அதில் 53-54-ம் பக்கங்களில் மாத்யாஹ்நிக ஸந்த்யாவந்தநம் ப்ரஸ்தாபிக்கப்படுகிறது.

"माध्याह्निक संध्योपस्थाने......"आसत्येनेति षडृचस्य हिरण्यस्तूप ऋषिः आद्ययोस्त्रिष्टुप्, चतसृणां गायत्री जगत्युष्णिक् त्रिष्टुभश्छन्दांसि। सविता देवता। माध्याह्निकसंध्योपस्थाने विनियोगः।

(1) आ सत्येन......(2) उद्वयंतम... (3) उदुत्यं....(4) चित्रंदे...(5) तच्चक्षुर्देवहितं पुरस्ताच्छुक्रमुच्चरत्।......ज्योक् च सूर्यंदृशे. (6) य उदगा..पुनातु " इत्यादित्यमुपस्थाय "

என்று அச்சிடப்பட்டிருக்கிறது. இதிலும் முந்தைய நூல்களில் போலவே ப்ரக்ருதவிசார விஷயமான மந்திரம் உஷ்ணிக் சந்தஸ்ஸாகவே அச்சிடப்பட்டுள்ளது. ஏனைய மந்திரங்களைப் பற்றின குழப்பங்கள் இதிலும் அப்படியே இடம் பெற்றுள்ளன.

இப்படி ஏழு ஆஹ்நிக புஸ்தங்களில் ப்ரக்ருத விஷயம் "तच्चक्षुः..." என்னும் மந்திரம் உஷ்ணிக் சந்தஸ் என்றே இருப்பதைக் காட்டினோம். இவை தவிர மற்றும் பல க்ரந்தங்கள் அச்சாகியிருக்கக்கூடும். இவைகளின் மறுபதிப்பும் வந்திருக்கலாம். அவைகளும் இந்த ஏழு வகை நூல்கள் போலவே இருக்கக்கூடும். இந்த ஏழு க்ரந்தங்களும் ஸாக்ஷாத்தாகவோ — பரம்பரையாகவோ — நேர்முகமாகவோ - மறைமுகமாகவோ—ஆசார்ய ப்ராசர்ய பரம்பரையாய்-சிஷ்யப்ரசிஷ்ய பரம்பரையாய்—காலக்ஷேப க்ரந்தமாகி உபதேசம் செய்யப்பெற்று — ஆஸ்திகர்களான—அனுஷ்டான ச்ரத்தை உள்

நாவல்பாக்கம் ஸ்ரீ தேவநாதாச்சாரியர்

ாவர்களான — வைதிகப்ராம்மணர்கள் அனைவராலும் தத்தம் அனுஷ்டானங்களுக்கு ஆதாரமாகக் கொள்ளப்பட்டவை. மாற்று மொழியில் சொல்வதானால் இந்த க்ரந்தங்களுக்கெல்லாம் ஆதாரமானது அனாதி கால ஸித்தமான மஹான்களின் அனுஷ்டானமேதான். இப்படி க்ரந்தங்களைப் பார்த்து அனுஷ்டானமும்-க்ரந்தங்களும்—மாறி மாறி வந்து கொண்டேயிருக்கின்றன. இது தவிர-அனுஷ்டானத்தைப் பார்த்தே அனுஷ்டானமும் - க்ரந்தத்தைப் பார்த்தே மற்றொரு க்ரந்தமும் தோன்றுவதுமுண்டு.

இந்த க்ரந்தங்களெல்லாம் ஒன்றை மற்றொன்று "காப்பி"யடிப்பதாகவே அமைந்துள்ளமை ஒரு அதிசயம். இவைகளில் கூறப்படும் விஷயங்கள் அனைத்தையும் சிரத்தையுடன் அனுஷ்டிப்பவர் பலர் நேற்றும் இன்றும் நாளையும் உளர். வைதிக தர்மானுஷ்டானத்துக்கு முதுகெலும்பு போன்றவர்கள் இவர்கள். இப்படிப்பட்ட மஹநீயர்கள் — தெரிந்தோ — தெரியாமலோ — இஷ்டத்துடனோ - இஷ்டமில்லாமலோ — இந்த க்ரந்தங்களிலுள்ள — அல்லது-இவற்றின் ஆதாரத்தின் பேரில் உபதேசிக்கப்பட்டு வருகிற — மேலே காட்டிய விஷயங்களை உருக்குலையாமல் காப்பாற்றி வருகின்றனர். சிரத்தைக் குறைவினால் — அல்லது — அவகாசமின்மையினால் பலர் இந்த ரிஷி-ச்சந்தோ-தேவதைகளைச் சொல்லாமல் உபஸ்தாந மந்திரங்களை மட்டும் சொல்லி விடுவதும் உண்டு. அவர்கள்தான் "நிம்மதி"யானவர்கள். இந்தப் பிடுங்கலான விசாரம் அவர்களிடம் செல்லாமலே விலகி விடுமல்லவா? சிரத்தையுடன் அனுஷ்டானத்தில் ஈடுபடுகிறவர்கள் மேல் தான் இவையெல்லாம் சார்ந்து நிற்கின்றன.

இனி எடுத்துக்கொண்ட விஷயத்துக்கு வருவோம். "तच्चक्षु..." என்னும் மந்திரத்தை உஷ்ணிக் சந்தஸ் என்றே மறவாமல் சொல்லி வரும் அத்தனை பேரும் இந்த மந்திரத்தில் - "पुरस्तात्" என்னும் பதத்தையும் மறவாமல் சேர்த்தே எழுதி வைத்துள்ளதையும் பார்த்தோம். இது தான் இங்கு பொருத்தமற்ற விஷயம் :-

(1) உஷ்ணிக் சந்தஸ்ஸானால் 28 எழுத்துக்களே இருக்க வேணும். அப்போது "पुरस्तात्" என்னும் பதம் இந்த மந்திரத்தில் இருக்கக் கூடாது.

(2) "पुरस्तात्" என்னும் பதம் இந்த மந்திரத்தில் இருக்க வேண்டியது அவசியம்-தவிர்க்க முடியாதது-என்றால் இந்த மந்திரம் உஷ்ணிக் சந்தஸ் என்னும் வாதத்தைக் கைவிட வேணும். 31-எழுத்தில் உஷ்ணிக் சந்தஸ் கிடையாதே!

இதுதான் இப்போதைய விசாரம். ரிக்வேதிகளுக்கு இந்தக் கஷ்டமே இல்லை. அவர்களது பாடத்தில் இந்த "-पुरस्तात्" பதம் இல்லவே இல்லையே! இந்தத் தலைவலியிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக இந்த மந்திரத்தை ருங்மந்திரம் என்னாமல் யஜுர் மந்திரம் என்று சொல்லிவிடலாமா? யஜுர் மந்திரங்களுக்கு எழுத்துக்களின் எண்ணிக்கையில் நிர்பந்தமில்லை. பூர்வமீமாம்ஸாஸூத்ரகாரராகிய ஜைமிநிமுனிவர் ருக்-ஸாம - யஜுர் - மந்திரங்களுக்கு லக்ஷணங்களைக் கூறியிருக்கிறார் :—

(1) तेषामृग्यत्रार्थवशेन पादव्यवस्था (पू. मी. द. 2-1-11)

(2) गीतिषु सामाख्या (पू. मी. 2-1-12)

(3) शेषे यजुश्शब्दः (पू.मी.द. 2-1-13)

என்று. "पादव्यवस्थावन्मन्त्रत्वं ऋक्त्वम्-" என்பது ருங் மந்திரங்களின் லக்ஷணம். எழுத்துக்கணக்குக் கட்டுப்பாடுடைய பாதங்களுடன் கூடின மந்திரம் என்பது. "मन्त्रत्व समानाधिकरण गीतित्वं सामत्वम्" என்பது ஸாம மந்த்ரலக்ஷணம். "மந்திரங்களில் பாடப்படும் சங்கீதமே ஸாம மந்த்ரம்" எனறவாறு.

"ऋक्सामभिन्नमन्त्रत्वं यजुष्ट्वम्" என்பது யஜுர் மந்த்ரலக்ஷணம். "ருங் மந்த்ரம் - ஸாமமந்த்ரம் - இவைகளிரண்டையும்விட வேறு மந்திரங்களெல்லாம் யஜுர் மந்திரம்" என்றபடி.

இந்த "तच्चक्ष..." என்னும் மந்த்ரத்தை ஷ்டி இனங்களில் மூன்றாவதாக ஏற்றுக் கொள்வதனால் இந்த வீண் சர்ச்சையெல்லாம் ஒரேயடியாக ஒழிந்து போகும். "पुरस्तात्" என்னும் பதத்தையும் இந்த மந்திரத்தில் கூட்டியே சொல்லும் அனாதி ஸம்ப்ரதாயமும் காப்பாற்றப்பட்டதாகும். இப்படிச் செய்தாலென்ன?

ஆனந்தமாகச் செய்யலாம். இதை யடுத்து வரும் "சரதச்சதம்" என்னும் மந்திரங்களை இந்த வழியில் தான் நாம் நிர்வஹிக்கவேணும். ஆஹ்நிக க்ரந்தகாரர்கள்தான் அவ்

## கவனிக்கவும்

திருமலையில் குடில்கள், அறைத் தொகுதிகள், தங்குமிடங்கள் கட்டுவதற்கென நன்கொடையாளர்கள் அனுப்பும் தொகையானது செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் எனும் பெயரில் டி. டி. மூலம் அனுப்பப்படல் வேண்டும். கடிதப் போக்குவரத்துக்களை, தி. தி. தே. செயற் பொறியாளர் V என்னும் முகவரியுடன் கொள்ளாது, இனி மேல் தி. தி. தே. செயலாட்சித் தலைவர், அல்லது தலைமை கணக்கு அலுவலர் எனும் முகவரிகளுடன் வைத்துக் கொள்ளவும். ஏனெனின் 'நன்கொடைத் திட்டம்' தற்போது தி. தி. தே. நிதி ஆலோசகர் மற்றும் தலைமை கணக்கு அலுவலர் பொறுப்பில் செயற்பட்டு வருகின்றது.

வழியில் செல்லவொட்டாமல் நமக்கு இடையூறு செய்கின்றனர். அவர்களனைவரும் ஒரே குரலாக இதை உஷ்ணிக் சந்தஸ் என்று முடிவாகக் கூறி வைத்திருக்கிறார்களே! சிலர் தொடர்ந்து வரும் "சரதச் சதம்" இத்யாதிகளுக்குங்கூட சந்தஸ் சொல்லுகிறார்களே!! அதனால் இதை யஜுர் மந்த்ரம் என்று சொல்வது சாத்தியமில்லை. இது ருங்மந்த்ரமேதான். உஷ்ணிக் சந்தஸ்ஸேதான். 28 எழுத்துக்களேதான்.

அப்படியானால் இனிச் செய்ய வேண்டியதென்ன? வைதிகர்களான அனுஷ்டாதாக்கள்தான் இதில் முடிவு கூற வேணும். தற்போதைய அனுஷ்டானம், "இருப்பதொன்று— அதைப் பற்றிச் சொல்வது மற்றொன்று" என்னும் ரீதியில் உண்மைக்குப் புறம்பாகவே ஓடிக் கொண்டிருக்கிறது. இதைச் சீர்படுத்தியாக வேணும். இதில் எனது அபிப்ராயத்தை முன்னமே தெரிவித்து விட்டேன். நாடெங்குமுள்ள வேதம் வல்லார்களனைவரும் இந்த விஷயத்துக்காக ஓரிடத்தில் கூட வேணும். ஸ்ரீ. காஞ்சீ பெரியவாள், ஸ்ரீ மத ஹோபிலமடம் ஸ்வாமி இப்படிப்பட்டவர்கள்தான் இப்படி ஒரு ஸம்மேளனத்தை முன்னின்று நடத்த வேணும். அதில் தீர விசாரித்து ஒரு சரியான முடிவு காண வேணும். அன்று முதல் அனைவரும் ஒரே வழியில் அந்த முடிவை அனுஷ்டானத்தில் கொண்டு வர வேணும். இப்படி ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்ட பிறகுதான் இந்தத் தலைவலி தீரும். இதுதான் என் அபிப்ராயம்.

வைதிக ஸமூஹத்தையே பாதிக்கக் கூடிய விஷயமிது. இதில் நான் மட்டும் தனியாகவே ஒன்றும் செய்து விட முடியாது. அபிப்ராயம் கூறுவதும் உசிதமில்லை. மகாஜனங்கள் ஒன்று கூடியேதான் இதில் முடிவு காண வேண்டும். ஆனாலும் முதன்முதலாக இவ்விஷயத்தை நானொருவனே எடுத்துக்காட்டியபடியால் எனது அபிப்ராயத்தையும் சொல்ல வேண்டிய அவசியமேற்பட்டது. அவ்வளவுதான்.

இவ்வாராய்ச்சியில் பல நூல்களையும் அவற்றை எழுதினவர்களையும்-அச்சிட்டவர்களையும் நான் குறிப்பிட்டிருக்கிறேன். ஆராய்ச்சி என்பது நீண்ட பயணம் போன்றது. அதில் மைல் கல் போல் அடையாளமாக இப்படிச் செய்ய வேண்டியது இன்றியமையாததாகிறது. ஒரு புஸ்தகத்திலுள்ள ஒரு விஷயத்தை வாசகர்களுக்கு எடுத்துக் காட்டுவதற்கு இப்படிச் செய்தே தீர வேணும். இதை இவ்வாறாகவே ரஸிகர்கள் புரிந்து கொள்வார்கள். எடுத்து எழுதப்படும் பெயர்கள்—அந்தந்த நபர்கள் மீது ஏதோ "தப்பு"களைச் சுமத்துவதற்காகக் கையாளப்படவில்லை. அது எமது ஆராய்ச்சிக்கு அவசியமில்லாததொன்று. இன்னின்ன நூல்களில் விஷயம் இவ்வாறாக உள்ளது என்பதை எடுத்துக் காட்டுவதே முக்கியம். உண்மை இவ்வாறாக இருப்பதனால் எந்த வ்யக்தி விசேஷத்தையும் நாம் தூஷிக்கவில்லை என்பது தேறுகிறது.

மஹாவித்வான் ஒப்பிலியப்பன் கோவில் நவநீதம் ஸ்ரீ ராம தேசிகாச்சாரியரை அறியாதாரில்லை. தேசிக ப்ரபந்தத்தில் ஒரு பாசுரத்தில் ஒரு சிறு திருத்தம் செய்ய வேண்டிய தன் அவசியத்தை அவர் ஆராய்ந்தறிந்தார். அதை அனுஷ்டானத்தில் கொண்டு வருவதற்குப் பெரு முயற்சி செய்து வருகிறார். பயனில்லை. தவறு என்று நன்றாகத் தெரிந்த பிறகுங் கூட யாரும் பழகிவிட்ட பாடத்தைக் கைவிட மாட்டேனென்கிறார்கள். சமூகம் அவ்வளவு கண்டிப்பாக இருக்கிறது. இந்நிலை வரவேற்கக் கூடியதே. அதிலும் ஒரு வரையறை அவசியம். உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ப்ரத்யக்ஷமாகத் தெரியும் விஷயத்தை மறுப்பது உசிதமில்லை. இதுவேதான் எனது நிலைமையும்.

நேர்மை குன்றாத வகையில் இப்படியேயமைந்த எனது சொற்களை துர்விநியோகப்படுத்தி, அவ்வோ பெரியவர்களின் திருவடிகளில் நான் அபசாரப்பட்டுவிட்டதாக ஒரு எண்ணத்தை உண்டுபண்ண முயற்சித்து, பஞ்சதந்த்ர முறையில் பலருடையவும் விரோதத்தை என்பேரில் சுமத்த முயற்சிக்கிறவர்கள் ப்ராமாணிகர்களில்லை.

"सर्वथा व्यवहर्तव्यं कुतो ह्यवचनीयता ।
यथा स्त्रीणां तथा वाचां साधुत्वे दुर्जनो
जनः ॥"

என்னும் பவபூதி மஹாகவியின் ச்லோகத்துக்கு உதாஹரணமாகவே அவர்களைக் கொள்ள வேணும்.

இப்படிப் பலவாறாக துஷ்ப்ரசாரம் செய்து அஜாத சத்ருக்களான ஸாத்விகோத்தமர்களை என் மீது கோபங்கொள்ளுமாறு தூண்டிவிட முயற்சிப்பது இவர்களுடைய தாழ்ந்த மனப்போக்கையே காட்டும். அவ்வளவேயன்றி அந்த உத்தம புருஷர்கள், சாந்தமான முறையில் உண்மையை நன்குணர்ந்து, இவர்களது "பஞ்சதந்திர"ங்களுக்கு ஆளாகாமல் கலங்காப் பெருங்கடல்போல் கம்பீரமாகவே இருப்பார்கள்.

"उपमान मशेषाणां साधूनां य स्सदाभवत्"

என்கிறபடி ப்ரஹ்லாதாழ்வான் போன்ற இந்த ஸாதுக்களுடைய உள்ளக்கிடக்கையை உள்ளவாறே புரிந்துகொள்ள மற்றவர்களால் முடியவே முடியாது. மஹாகவிகளுக்குத்தான் அது புரியும். இந்த பவபூதி மஹாகவிதானே இதையும் சொல்லியிருப்பதைக் காணீர்!

"प्रियप्राया वृत्ति विनयमसृणो वाचि नियमः
प्रकृत्या कल्याणीमति रनवगीतः परिचयः ।
पुरो वा पश्चाद्वा तदिदमविपर्यासितरसं
रहस्यं साधूना मनुपधि विशुद्धं विजयते ॥"

(உத்தரராமசரிதம் 2-வது அங்கம்)

"இனிமையான நடவடிக்கை, வினயம் நிரம்பின வார்த்தைகள், மிதமான பாஷணம், இயற்கையிலேயே மங்களகரமான மனப்போக்கு, கண்யமான பழக்கம், முன்னும் பின்னும் மாறுபடாத-இந்த-இன்றியமையாததான-படாடோபமற்ற ஸாதுக்களின் நற்பண்பு தூய்மையுடன் ஒளி வீசும்"

என்று ஒருவாறாக இதன் கருத்தை எழுதினேன். உள்ளபடியே இதை விவரிப்பது என்போல்வார்க்கு அஸாத்யமே.

"संभाष्य पुण्यकृतो मनसा ध्यायेत्"

என்கிற மகரிஷியின் உபதேசப்படி, பரந்த திருவுள்ளம் படைத்த மஹான்களின் ஸ்மரணத்துடன் இவ்விஷயத்தை முடித்துக்கொள்கிறேன்.

சிறுவர் பகுதி :

# வைணவத்தில் அற்புதங்கள்

**விஷ்ணுசித்தரின் பெருமை :**

பாண்டியநாட்டை ஆளும் மதுரை மன்னன் வலதேவன் அறிவிற் சிறந்தோன். மானுடர் முக்தி நிலை அடைவதற்கு ஏற்ற சித்தாந்தமும், பரம்பொருள் இன்னதென்றும் அறிய ஆவலுடனிருந்தான். நாடெங்கெலுமுள்ள சமயவாதிகளுக்கும் பாகவத சிரேஷ்டர்களுக்கும் தன் தூதுவர்கள் மூலம் அறிவிக்கச் செய்து, அவர்களைத் தன் சபைக்கு வரவழைத்து, தத்தம் சமயக் கொள்கைகளை விளக்கி, முக்திக்கு வித்தாகவுள்ள பரம்பொருளை நிரூபணம் செய்து அரச சபையில் ஒரு பொற்கிழியைப் பெற்றுக் கொள்ளலாம் எனப் பறையறிவித்தான்.

சமயப் பேரறிஞர்களும் தர்க்க சாஸ்திர நிபுணர்களும் பாண்டிய நாட்டை அடைந்து, அரச சபையில் தங்கள் வாதத் திறனைக் காட்ட முயன்று தோற்று, எவரும் பொற்கிழியைப் பெறாததைக் கண்டு மன்னன் வலதேவன் மனம் கலங்கினான்.

இந்நிலையில் ஸ்ரீவில்லிபுத்தூரில் வடபெருங்கோயிலுடையான் புஷ்பக் கைங்கரியத்தில் இடைவிடாது ஈடுபாடு கொண்ட விஷ்ணு சித்தர் அரசவையைச் சேர்ந்தார். அவரை எதிர்கொண்டு வரவேற்று, உபசாரங்கள் பல செய்து, தக்க ஆசனத்தில் அமர்த்தினார்கள். அரசசிப்பந்திகள், சகல சமயாசாரியர்களும் தர்க்க வாத நிபுணர்களும் திரண்டிருந்த அச்சபையில் விஷ்ணுசித்தர் எழுந்து நின்று, எம்பெருமானைப் பலவாறு இறைஞ்சி வணங்கினார். சதுர் வேதங்களும் சாஸ்திரம் அனைத்தும் போற்றும் அப்பரம்பொருளையே ஆதாரமாகக் கொண்டது, விசிஷ்டாத்வைத சித்தமாகிய ஸ்ரீ வைஷ்ணவ சமயம் என்று நிரூபணம் செய்தார். உடனே அரச சபையில் கட்டப்பட்டிருந்த பொற்கிழி விஷ்ணுசித்தர் திருப்பாதங்களின் முன் தாழ்ந்தது. விஷ்ணுசித்தர் வலதேவனை ஆசீர்வதித்தபின் ஸ்ரீவில்லிபுத்தூர் திரும்பி, மீண்டும் வடபெருங் கோயிலுடையான் புஷ்பமாலை கைங்கர்யத்தைப் புரிந்து வந்தார்.

**மாதவத்தோன் புத்திரனை மீட்டுக் கொடுத்தல் :**

கண்ணபிரான் சிறுவயதில் சாந்தீபினி என்னும் குருநாதரை நாடி, சகல சாத்திரங்களையும் கற்றான். குருதட்சிணை கொடுப்பதற்காக குருவை வினவினான். அவ்வாசிரியர் கண்ணனுடைய ஆற்றல் சிறப்பை நன்கு அறிந்தவர். பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு முன்பு மேற்குக் கடலில் பிரபாச தீர்த்தத் துறையில் நீராடும்போது மூழ்கி இறந்துபோன தன் மகனைக் கொண்டு வந்து தரவேண்டும் என்று தன் விருப்பத்தைத் தெரிவித்தார். கண்ணபிரானும் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு, கடலில் வாழ்கின்ற 'பஞ்சஜனன்', என்ற அசுரனே குருவின் மகனைக் கொண்டு போயினான் என அறிந்து, உடனே கடலில் குதித்து, அவ்வசுரனைக் கொன்று, அவன் உடலாகிய பாஞ்சசன்யத்தை எடுத்து, வாயில் வைத்து முழங்கிக் கொண்டு, யமபுரிக்கு எழுந்தருளினான். அங்குக் கிடந்த அந்தச் சிறுவனை அவன் இறந்தபோது கொண்டிருந்த உருவம் மாறாதபடி கொண்டுவந்து தட்சிணையாகக் கொடுத்தான், குருநாதனுக்கு. பெரியாழ்வார் இச்சம்பவத்தைப் போற்றுகிறார்.

''மாதவத்தோன் புத்திரன் போய
மறிகடல்வாய் மாண்டானை
ஓதுவித்த தக்கணையா
உருவுருவே கொடுத்தானூர்
தோதவத்தித் தூய்மறையோர்
துறைபடியத் துளும்பியெங்கும்
போதில் வைத்த தேன் சொரியும்
புனலரங்கம் என்பதுவே''.
—பெரியாழ்வார் திருமொழி.

பெரியாழ்வார் திருவரங்கத்தின் மீது மங்களாசாசனம் செய்த பாசுரம். கண்ணபிரான் சாந்தீபினி என்னும் குருதேவரிடம் சகல சாத்திரங்களையும் கற்ற பிறகு, குருதட்சிணையாகக் கடலில் சில ஆண்டுகட்கு முன்பு இறந்த மகனை உருமாறாத வண்ணம் கொண்டுவந்து கொடுத்தான். அவன் உறையும் ஊர் திருவரங்கம் என்கிறார் பெரியாழ்வார்.

**சந்தனம் பூச, கூன் நிமிர்ந்தது :**

கண்ணனும் பலராமனும் வட மதுரையில் ராஜவீதியில் வந்து கொண்டிருந்தார்கள். அச்சமயம் மங்கைப் பருவமுடைய ஒரு கன்னி கையில் சந்தனக் கிண்ணத்துடன் வந்து கொண்டிருந்தாள். அக்கிண்ணத்திலிருந்து வந்த நறுமணம் கண்ணன் முகர்ந்தான். கண்ணன் அம்மங்கையை வினவ, ''ஐயனே, நான் நைகவக்கிரை என்பவள். கம்சராஜனுக்குச் சந்தனம் சித்தம் கொண்டிருக்கும் தொழிலில் இருப்பவள்'', என்று பதிலளித்தாள்.

உடனே கண்ணன், ''எங்களுக்குச் சந்தனம் வேண்டும்'' எனக் கூற, கூனிச் சிறுமி, கண்ணன் பலராமன் விரும்பிய சிறந்த சந்தனத்தை அவர்கள் திருமேனியில் பூசினாள். கண்ணன் ஆனந்த மேலீட்டினால், தன் நடுவிரலும் அதன் முன் விரலுங்கொண்ட நுனிக் கையினாலே அச்சிறுமியை மோவாயக்கட்டையைப் பிடித்துத் தன் திருவடிகளினால் அவள் கால்களை அமுக்கி, இழுத்துத் தூக்கிக் கோணலை நிமிர்த்தி அவளை யுவதியாக்கினான்.

இச்சம்பவத்தைப் பெரியாழ்வார் பாசுரத்தில் பார்ப்போம் :

''நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென,
தேறி அவளும் திருவுடம்பில் பூச,
ஊறிய கூனினை உள்ளே யொடுங்க
அன்று
ஏற வுருவினாய் ! அச்சோ அச்சோ !
எம்பெருமான் ! வாரோ யச்சோ
அச்சோ !
—பெரியாழ்வார் திருமொழி.

கண்ணபிரானுடைய அற்புதச் செயல்களை பெரியாழ்வார் வாயிலாகக் கேட்டோம்; களி கூர்ந்தோம். நாரதன் புகழ்ந்த கண்ணனை நாம் எற்றைக்கும் மறவோம்.

*

திரு. ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு,
திருப்பதி.

# விழா கொண்டாடும் வித்யாபீடம்

திருப்பதியில் உள்ள இந்த கேந்த்ரிய சம்ஸ்கிருத வித்யாபீடம் ஆரம்பிக்கப்பட்டு 25 ஆண்டுகள் முடிவடைந்து தன்னுடைய வெள்ளி விழாவினை 1987 ஜனவரியில் கொண்டாடியது.

இந்த வித்யாபீடத்திற்கான அடிக்கல்நாட்டு விழாவினை முன்னாள் இந்திய குடியரசுத்தலைவர் அமரர். டாக்டர். ஸர்வபள்ளி திரு. இராதா கிருஷ்ணன் அவர்கள் 4-1-1962ல் நட்த்தி வைத்தார்.

அதன்பின் 18-8-73ல் மத்ய மின் துறை அமைச்சர் அமரர். டாக்டர். கே. எல். ராவ் அவர்கள் தற்சமயம் உள்ள கட்டிடத்தைத் திறந்து வைத்தார். இப்பொழுது மனித மேம்பாட்டுத்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. பி. வி. நரஸிம்மராவ் அவர்கள் வெள்ளி விழாவினைத் தொடக்கி வைத்தும், வெள்ளி விழா புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்தும், முன்னாள் இயக்குனர் டாக்டர் திரு. பி. ஆர். சர்மாவின் மணிவிழா மலரை வெளியிட்டும், பட்டமளிப்பு விழாவினையும் நடத்திக் கொடுக்கவும் செய்தனர்.

ஸம்ஸ்க்ருதம் எல்லா மொழிகளுக்கும் தாய்மொழி என்பதிலும், பழமையான மொழி என்பதிலும் எவ்வித ஐயமுமில்லை. இந்த மொழி நாளடைவில் வளர்ச்சிக்குன்றிப் புழக்கத்தில் மறைந்து விடும் என்ற எண்ணத்தால் மத்ய அரசு இந்த மொழியின் முன்னேற்றத்திற்காக 1-10-1956ல் ஒரு குழு அமைத்து விவரம் கேட்டிருந்தது. அக்குழுவும் தனது கருத்தைக் கூறியது. அதாவது தென்னகத்தில் ஒரு ஸம்ஸ்க்ருத பல்கலைக்கழகம் அமைக்க வேண்டுமென்று. அதன் பயனாக இந்த வித்யாபீடம் திருப்பதியில் அமைக்கப்பட்டது. இதற்காக முன்னாள் திருமலை-திருப்பதி தேவஸ்தான அற நிலைய ஆணையர் டாக்டர் திரு. ஸி. அண்ணாராவ் அவர்கள் 41 ஏக்கர் நிலமும், 10 இலட்சம் ரூபாய் மூல தனமும் அளித்து உதவினார்கள்.

இந்த வித்யாபீடமானது அழிந்து வரும் சாஸ்த்ரங்களையும், பழைய ஓலைச் சுவடிகளையும் காப்பாற்றிப் பலவித ஆராய்ச்சிகளையும், புத்தக வடிவமாக அச்சிடவும் வெளியிடவும் முயற்சி செய்து வருகிறது. மேற்கூறிய பணிகளைச் செவ்வனே செய்ய பல துறைகளை ஆரம்பித்தது. போதனாமுறை, ஆராய்ச்சிமுறை, ஸம்ஸ்க்ருதத்தில் மேல் படிப்பு போதனா முறை, நூல் நிலையம் முதலியனவாகும். இந்த வித்யாபீடத்தில் போதனா முறை ஸம்ஸ்க்ருதமேயாகும்.

**ஆசிரியர்ப் பயிற்சி :**

1962ல் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்காக ஸம்ஸ்க்ருத ஆசிரியர்ப் பயிற்சி வகுப்பு 'சிக்ஷா சாஸ்த்ரி' (B.Ed.,) தொடங்கப்பட்டது. பயிற்சி மொழி ஸம்ஸ்க்ருதமே என்பது குறிப்பிடத்தக்கது. ஆரம்பத்தில் இந்த வகுப்பில் 30 மாணவர்களே சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். நாளடைவில் 98 மாணவர்களாக உயர்த்தப்பட்டு இரண்டு பிரிவுகளாக நடத்தப்பட்டு வருகின்றன. 1983ல் முதுநிலை ஆசிரியர்ப் பயிற்சி வகுப்பும் ஆரம்பிக்கப்பட்டு நடந்து வருகிறது. இவ்வகுப்பில் இதுவரை 24 வருடங்களாக மாணவர்கள் (1721) தேர்ச்சிப் பெற்று சென்றுள்ளார்கள். இத்துடன் "வித்யா வாரிதி" என்ற (பி.எச்.டி.,) ஆராய்ச்சி மாணவர்களும் ஆராய்ச்சி செய்து பட்டம் பெற்று சென்றுள்ளார்கள். ஆசிரியர்ப்பயிற்சி பெற்ற மாணவர்கள் இதுவரை 1352 பேர்களாகும். பல மாநில மாணவர்கள் பயிற்சி பெற்று சென்று பணியில் அமர்ந்துள்ளார்கள். குறிப்பாக தமிழ்நாட்டு மாணவர்கள் 180க்கு மேல் பயிற்சி பெற்று பல ஊர்களில் வேலை பார்த்து வருகிறார்கள். இந்த வகுப்புப் பயிற்சி பெற உதவியாக முன்னாள் பேராசிரியர் திரு. வி. எஸ். வெங்கடராகவாச்சாரி எழுதிய "சிக்ஷா மனோவிக்ஞானம்" என்ற நூலும், விரிவுரையாளர் திரு. பி. ஸுப்பராயுலு எழுதிய Statistic in Education என்ற நூலும், பேராசிரியர் டாக்டர் திரு. அரளிக்கட்டி எழுதிய சில கட்டுரைகளும் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளன.

**ஆராய்ச்சி வெளியீடுகள் :**

இந்தப் பகுதி 1964ல் ஆரம்பிக்கப்பட்டு நடந்து வருகிறது. இத்துறையில் வைகானஸாகமம், பாஞ்சராத்ராகமம், சைவாகமம், இவைகளின் கலைக் களஞ்சியம் தயார் செய்து வெளியிட பணிகள் நடந்து வருகின்றன. தற்பொழுது வைகானஸ ஆகம கலைக் களஞ்சியம் தயாராகி முதல் பாகம் கூடிய விரைவில் வெளிவர இருக்கிறது. இப்பணியில் கீழ்க்கண்டவர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்கள். டாக்டர் என். எஸ். ஆர். தாதாசாரியார், டாக்டர் உ. சங்கரபட், எல். என். பட்டா, எம். ஏ. பட். கே. ஏ. பாலசுப்ரமணியன், டாக்டர் டி. ஜி. அனந்த சுப்ரமணியன் முதலானோர்.

**வித்யாபீட வெளியீடுகள் :**

இந்த வித்யாபீட முன்னாள் இயக்குனர் டாக்டர் திரு. பி. ஆர். சர்மா அவர்களால் இந்த வித்யாபீட வெளியீடாக ஸாமவேத பிராம்மணங்கள், பிரதிஹார ஸூத்ரம் முதநூல்கள் விளக்க விரிவுரையுடன் வெளியிடப்பட்டுள்ளன. மொத்தம்

44 நூல்கள் இந்த வித்யாபீட வெளியீடாக வந்துள்ளன.

வகுப்புகள் :

1969ல் மறைந்து வரும் சாஸ்த்ரங்களைப் படிக்க, படிப்பிக்க வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டன. அவைகளாவன:

| | |
|---|---|
| பிராக் சாஸ்திரி | +2 சமம். |
| சாஸ்திரி | பி.ஏ. சமம். |
| ஆசார்ய | எம்.ஏ. சமம். |
| வித்யா வாரிதி | பி.எச்டி. சமம். |
| சிக்ஷா சாஸ்திரி | பி.எட். சமம். |
| சிக்ஷா ஆசார்யா | எம்.எட். சமம். |

இந்த எல்லா வகுப்புகளுக்கும் ஸம்ஸ்க்ருதமொழியே பயிற்சி மொழியாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

நூல் நிலையம் :

இங்குள்ள நூல் நிலையத்தில் 40,000 அச்சிட்ட புத்தகங்கள் பல மொழிகளில் உள்ளன. 4,800 ஓலைச் சுவடிகளும், ஆராய்ச்சி பத்திரிகையும் இருக்கின்றன. திரு. எல். என். பட் என்பவர் பல ஓலைச் சுவடிகளை இனமாக அளித்துள்ளார்கள். ஓலைச் சுவடிகள் கிரந்தம், மலையாளம், தெலுங்கு நந்தி நாகரீ போன்ற எழுத்துக்களில் உள்ளன.

ஒலி நாடா தொகுதி :

1969ம் ஆண்டு இந்த வித்யாபீடத்தினால், அழிந்து, மறைந்து வரும் வேதங்களையும் சாஸ்த்ரங்களையும் பண்டிதர்களைக் கொண்டு சொல்லச் சொல்ல ஒலி நாடாவில் பதிவு செய்து பாதுகாப்பது என்ற முறையின்கீழ் ஒரு துறை வேலை செய்து வருகிறது. இத்துடன் தி. தி. தேவஸ்தானமும் சேர்ந்து இப்பணியைச் செய்ய முன் வந்தது. இதற்குத் தலைவராக டாக்டர். எம். டி. பாலசுப்ரமணியன் நியமிக்கப்பட்டுள்ளார். முதலில் வேதங்கள் எடுக்கப்பட்டு, தற்சமயம் மீமாம்ஸாதர்சனத்தை ஒலிப்பதிவு செய்து வருகிறார்கள். இதற்காக இசைக் கல்லூரி வளாகத்தில் ஓர் ஒலிப் பதிவுக்கூடம் தி. தி. தேவஸ்தானத்தாரால் கட்டிக் கொடுக்கப்பட்டுள்ளது.

இராஷ்ட்ரபதி விருதுகள் :

இந்த வித்யாபீட முன்னாள் இயக்குனர் டாக்டர். பி. ஆர். சர்மா, வி. எஸ். வெங்கடராகவாச்சாரி, டாக்டர் மண்டன மிச்ரா, டாக்டர். என். எஸ். ஆர். தாதா சாரியார் போன்ற இவர்கள் குடியரசுத் தலைவர் விருது பெற்றவர்கள்.

மாநாடுகள் :

அகில உலகிய அகில இந்திய மாநில ஸம்ஸ்க்ருத மாநாடுகளில் கலந்து கொண்டவர்கள் டாக்டர். எம். டி. பாலசுப்ரமணியன், டாக்டர். உ. சங்கர பட், டாக்டர். ஆர். என். அரளிக்கட்டி, டாக்டர். கே. வி. இராமகிருஷ்ணமாசாரியார், எல். என். பட், டாக்டர். வி. குடும்ப சாஸ்த்ரி, திரு. ஆஞ்ஜநேய சாஸ்த்ரி முதலியோர் ஆவார்கள்.

சிறப்புச் சொற்பொழிவுகள் :

மாணவர்களும் ஏனையோர்களும் பயன்பெறச் சிறப்புச் சொற்பொழிவுகள் ஒவ்வொரு ஆண்டும் நடத்தப்பட்டு வருகின்றன. இராமாயண பாரத பாகவதங்களிலும் சொற்பொழிவு நடைபெற தர்ம வரபு ஸீதாராமாஞ்ஜனேயுலு என்ற அன்பர் ரூ. 5000/- வைப்பு நிதியாகக் கொடுத்து உதவியுள்ளார்கள். அவருக்கு நன்றி.

விழாக்கள் :

ஒவ்வொரு ஆண்டும் ஆசிரியர் தினம், விநாயகர் விழா, மாணவர்களின் விடுதி தினம், வித்யாபீட ஆண்டு விழா முதலியவைகள் நல்ல முறையில் நடைபெறுவதோடு கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன.

மாலை நேர ஸம்ஸ்க்ருத வகுப்புகள் :

திருப்பதி நகரில் பள்ளி, கல்லூரி மாணவர்களுக்காக மாலை நேரத்தில் ஸம்ஸ்க்ருத வகுப்புகள் இலவசமாக வித்யாபீட விரிவுரையாளர்களைக் கொண்டும் மற்றவர்களைக் கொண்டும் நடத்தப்பட்டு வருகிறது. சித்தூர் ஸம்ஸ்க்ருத ப்ரசாரிணீ சபையினரால் நடத்தப்படும் தேர்வுகளுக்கு மாணவர்கள் அனுப்பி வைக்கப்படுகிறார்கள். இதற்குத் தலைவராகத் திருநாக முனி ரெட்டி பணியாற்றி வருகிறார்.

உதவித் தொகை :

வித்யாபீடத்தில் படிக்கும் மாணவர்களுக்கு தகுதியடிப்படையில் உதவித்தொகை பொதுவாக எல்லோருக்கும் அளிக்கப்படுகிறது. அதுவின்றி தி. தி. தேவஸ்தானத்தினரால் 25 பேருக்கு உதவித் தொகை அளிக்கப்படுகிறது.

கட்டிடங்கள் :

தி. தி. தேவஸ்தானத்தால் கொடுக்கப்பட்ட பணத்தைக் கொண்டு பிரதான கட்டிடம் கட்டப்பட்டு அதில் வகுப்புகள் அலுவலகம் முதலியன நடந்து வருகின்றன. விருந்தினர் விடுதி, மாணவர்கள் விடுதி, நூல் நிலையக் கட்டிடம் முதலியவைகளும் கட்டப்பட்டுச்செயல்பட்டுவருகிறது. வெள்ளி விழாவினை நினைவூட்டும் புது கட்டிடம் கட்டப்பட்டுத் திறக்கப்படவிருக்கிறது. மேலும் பணியாளர்களுக்கு வீட்டு வசதி செய்து தர முயற்சிக்கப்பட்டு வருகிறது.

பணியாளர்கள் :

இந்த வித்யாபீடத்தின் முன்னாள் இயக்குனர் டாக்டர். பி. ஆர். சர்மா பல புத்தகங்களை இரவு பகல் பாராமல் வெளியிட்டுள்ளார். அப்பணி வித்யாபீடத்தின் மேன்மையைப் புலப்படுத்துகிறது. மற்றும் வி. எஸ். வெங்கட ராகவாச்சாரி, டாக்டர். திரு. மண்டனமிச்ரா, திரு. கருணாகரன், டாக்டர். திரு. எம். டி. பாலசுப்ரமணியன் முதலியோரும் இந்த வித்யாபீடத்தின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டவர்கள் ஆவார்கள்.

# இரக்கமே அறியாத அரக்கியரும் அழுதனர்

சீதாப் பிராட்டி அசோக வனத்தில் பருமனுன இடையையுடையவாள் அரக்கியர்கள் நெருக்க, துக்கம் நெஞ்சை அடைக்க, தூக்கம் என்பதை அறியாதவளாய், வெயிலிடைத் தந்த விளக்கென ஒளி இழந்த உடலுடையவளாய் புலிக்கூட்டத்தின் நடுவில் இளம் பெண்மான் அகப்பட்டத் தன்மைபோலும் கருநிறத்தரக்கிகள் குழுவில் காவலிருந்தாள்.

யுத்தம் மும்மரமாக நடந்து கொண்டிருக்கும் தருவாயில், கட்டுப்பாட்டுக்குப் புறம்பாக ஜகன்மாதா ஜானகியை புஷ்பக விமானத்திலேற்றி அமர்களத்தில் கொண்டு வந்து பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்டு இளையபெருமாள் முதலானவர்கள் இறந்ததைக் கண்டு, துக்கித்து, துவண்டு, மெய்மறந்து மூர்ச்சை போட்டு கீழே விழுந்துக் கிடக்கும் தாமரைக் கண்ணுளனுன தன் பர்த்தாவை அப்பொல்லா அரக்கியர்கள் காண்பித்த பொழுது, பிராட்டி வாய் விட்டுலற அவ்வமயத்தில், யார் யார் உடனமுதார்கள் என்று கவிச்சக்ரவர்த்தி "களங்காண் படலத்தில்" பின்வரும் பாடலை வெகு அழகாக அமைத்ததுமல்லாமல், தானே அதற்கு வியாக்யானம் சொல்லி சதஸ்ஸில் குலோதுங்கச் சோழனையும் மற்றும் குழுமியிருந்த விற்பன்னர்களையும் வியக்கவைத்தார்.

"மங்கை யழலும் வானுட்டு மயில்க
ளழுதார், மழவிடையோன்
பங்கிலுறையும் குயிலழுதாள்; பதும
மலர் மேல் மாதழுதாள்
கங்கை யழுதாள்; நாமகளும்
அழுதாள்; கமலத் தடங்கண்ணன்
தங்கையழுதாள்; இரங்காத வரக்கி
மாரும் தளர்ந்தழுதார்.

(ஸ்வர்க்கலோகத்திலுள்ள இந்திராணி முதலான மயில் போன்ற மாதர்களும், ரிஷப வாகனத்தைக் கொண்ட சிவபிரானின் வாமபாகத்தை தனக்குச் சொந்தமாக்கிக் கொண்ட குயில் மொழியாள் உமாதேவியும், தாமரை தவிசில் வீற்றிருக்கும் திருமகளும், நான்முகன் நாவில் உறையும் நாமகளும், சத்யலோகத்திலுள்ள கங்கா தேவியும், புண்டரீகாக்ஷனை ஸ்ரீமந் நாராயணனின் உடன் பிறந்த தங்கை துர்க்கையும் அழுதார்கள். இரக்கம் என்பது ஒன்று உண்டு என்றறியாத அரக்கியரும் அழுதார்கள்). (பாசுரத்தின் பொருள்).

வைதேகி சாக்ஷாத் அலைமகள் அம்சமாகையால் கமலை துக்கித்தாள். தேவர்கள் சரணுகதியில் "கொலை தொழிலரக்கர் தங் கொடுமை தீர்ப்பனென்று, உலை உறு அமரருக்குரைத்த வாய்மையே" என்று அன்று அளித்த சத்ய வாக்கை நிறைவேற்ற சிறை இருந்தாள் சீதை, சிலை ஏந்தினன் சக்ரவர்த்தித் திருமகன் செருக்களத்தில். அதனுல் துக்கம் என்பதே அறியாதவர்களும் போகங்களிலேயே என்றும் திளைத்திருக்கும் இந்திராணி முதலான உம்பர்களும் அழுதார்கள். இதில் அவர்களுடைய சுயநலம் உளது. உமாதேவியோ மலையரசன் பெற்ற மகளாகையால் மனமும் அவ்வாறே கல்போல் இருக்க வேண்டியிருந்தும் ஜானகி, ஸ்ரீமந்நாராயணனின் கருணைக்குக் காரணகர்த்தாவாகையால், புருஷாகார பூதையிடம் மனம் கலங்கினுள். நான்முகன் நாகணையான் பிள்ளையாகையால் வாணி சீதைக்கு மருமகள் முறையாகிறது. சீதை கலைமகளுக்கு மாமியாராகிருள். சாதாரண உலக ரீதியில் மாமியாரிடம் மருமகளுக்கு பரிவோ அல்லது மனவருத்தமோ வராதிருப்பது இயல்பு. ஆனல் இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் மருமகள் தன் மனத் தாங்கலைத் தெரியப்படுத்தாமலிருப்பாளா! கம்பன், அதனுல் அழுதவர்கள் பட்டியலில் "வாணி" யை கூறுமிடத்து 'உம்' என்று அழுத்தம் திருத்தமாக பிரயோகித்துள்ளான். (நாமகளும்) இயற்கையாய் திரவ ரூபத்திலிருப்பதால் கங்கை அழுதது சகஜமே. "நீலிக்கு நெற்றியிலே கண்" என்ற வசனத்திற்கேற்ப கமலத்தடங்கண் பெருமாளின் தங்கையான துர்க்கை அழுததுவும் அதிசயமில்லை.

எந்நேரமும் ஜானகியை மொய்த்துக் கொண்டு தங்களுடைய இராக்ஷஸ யஜமானனின் ஆக்ஞைப்படி பிராட்டியை சித்திரவதைக்கு ஆளாக்கி சகலவிதமான உபத்திரவங்கள் புரிந்த இரக்கம் என்பதே அறியா அரக்கியர்கள் அழுததுதான் உள்ளபடி அதிசயம்.

திரு. எல். பி. சம்பத்,
சென்னை—44.

புஷ்பக விமானத்தில் பறந்தவாறே தன் பர்த்தாவும் மைத்துனர் இளைய பெருமாளும் களத்தில் படுத்திருக்கும் காட்சியைக் கண்டு வைதேகியின் திருமேனி எப்படிப் பதைத்திருக்க வேண்டும்! எவ்வளவு கண் கலக்கம் கொண்டிருக்க வேண்டும்! எதேது நினைந்து புலம்பியிருக்க வேண்டும்! இவைதான் அரக்கியர்களையும் அழவைத்தது என்றல் பிராட்டியின் பரிபாவத்தை வர்ணிக்க முடியாது. மேலும் தாயார் விஷயத்தில் தனிபட்ட முறையில் விசேஷ பரிவு உள்ளவர்களாதலால் ராக்ஷஸ ஸ்திரீகள் தங்கள் மனம் குழைய முகம் வாட, மெய்சோர, கண்ணீர் ஆருய்ப் பெருக, துக்கம் மேலோங்க அலறி அழுதார்கள் என்று கவிச்சக்ரவர்த்தி விரிவுரையை முடித்தவுடன் அங்கே ஸதஸ்ஸில் எழுந்தருளியிருந்த அனைவரும் பருவரல் பரவையில் ஆழ்ந்தார்கள். ✠

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடைத் திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் நலனுக்காக நன்கொடைத் தொகைகளின் மூலம் பல தங்குவசதிகளான குடில்கள், அறைத்தொகுதிகள், சத்திரங்கள், விருந்தினர் விடுதிகள் போன்றவற்றைக் கட்டுவதற்குப் பொது மக்களிடமிருந்து தேவஸ்தான மேலாண்மை நன்கொடைகள் பல பெற்று வருகின்றது. இத்திட்டத்தின் விவரங்கள் பின் வருமாறு:

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் ஒவ்வொன்றும் 4 அறைத் தொகுதிகளைக் கொண்டு விளங்கும்படியான 18 குடில்கள் கட்டிடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் கட்டப்படும்.

* பொதுத் தாழ்வாரம் மற்றும் குளியலறை இணைப்பு வசதியுடன் கூடிய 10×12 அடி பரப்பளவு கொண்ட அறையும் உள்ளதாக ஒவ்வொரு அறைத்தொகுதியும் விளங்கும்.
* ரூ. 30,000 வழங்கும் நன்கொடையாளரின் பெயரில் 320 சதுர அடி கட்டிட பரப்பளவு கொண்டதாக இவ்அறைத்தொகுதி விளங்கும். நன்கொடையாளர் விரும்பி, 8 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2. 4 இலட்சமும், 4 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 1.2 இலட்சமும், 2 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 60,000-ம் வழங்கினால், அவை கட்டித் தரப்படும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதி திட்டம்

கோயிலுக்கு வடகிழக்குப் பக்கத்தில் இந்த விருந்தினர் விடுதி கட்டப்படும். இவ்விடுதி மூன்று தளங்களையும், ஒவ்வொரு தளமும் 50 அறைத் தொகுதிகளையும், ஒவ்வொரு அறைத்தொகுதியும் 600 சதுர அடி கட்டிடப் பரப்பளவில் விளங்கும்படியாக 14×18அடி என்ற பரப்பளவில் உள்ள அறைகளையும் கொண்டு விளங்கும். மேலும் ஒரு பொதுத் தாழ்வாரமும் கொண்டு விளங்கும்.

* ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் நன்கொடையாளர் ரூ. 60,000 வழங்கவேண்டும்.

## ஸப்தகிரி தர்மசாலை

ரூ. 8.5 கோடி செலவில் "ஸப்தகிரி சத்திரங்கள்" எனும் பெயரில் இம்மாபெரும் திட்டம் மேற்கொள்ளப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியும் ரூ. 80,000/- செலவில் கட்டப்படும்.

ஆகும் செலவில் ரூ. 40,000/- நன்கொடையாளர் வழங்கினால், அவ்வறைத்தொகுதி அவருடைய பெயரில் அமையும்.

## பலன்கள்

நன்கொடையாளர்கள் வருடத்தில் 60 நாட்களுக்கு இலவசமாக அவருடைய நன்கொடை அறைத் தொகுதியில் அல்லது குடிலில் தங்கலாம். ஆனால் இந்தச்சலுகை நிறுவனங்களுக்கும், வாணிகக் கழகங்களுக்கும் 15 வருடங்களுக்கு மட்டுமே அளிக்கப்படும்.

* இத் தங்குவசதி ஒதுக்கீடுகளின் போது நன்கொடையாளர்களின் உற்றார் உறவினர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.
* ஒவ்வொரு அறைத்தொகுதி அல்லது குடிலிலும் சம்பந்தப்பட்ட நன்கொடையாளர்களின் பெயர்ப் பலகைகள் நிரந்தரமாகப் பொருத்தப்படும்.

மேற்படி திட்டங்களில் பங்கேற்க விரும்பும் நன்கொடையாளர்கள் அதற்கான தொகையினைச் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி." எனும் பெயரில் காசோலை மூலமாகப் பெற்று, தேவையான தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் இணைத்து அவற்றை, "தலைமை கணக்கு அலுவலர் தி. தி. தேவஸ்தானம் திருப்பதி" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு "செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

செயலாட்சித் தலைவர்.

" தரும் பொருள் சிறிதே; பெறும் அருள் பெரிதே "

# குரு பலம் பெரும் பலம்

கலைக் கல்வி தொழிலுக்கு குரு கடாக்ஷம் வேண்டும். குரு தீட்சை இல்லாத சிட்சை சிறப்பாக இருக்காது. ஆதலால் எத்தொழிலுக்கும் குரு கடாக்ஷம் அவசியமாகும். குரு பலம் பெரும் பலமாகும். நவக்கிரகங்களில் குரு கடாக்ஷம் உடையவர் வியாழன் என்னும் குருவாகும். ஜாதகத்தில் குரு பலம் பெற்று இருந்தால் மந்திரி மகான் குரு ஆசிரியர் தலைவராய் தரணியில் தலை சிறந்து விளங்க நேரும். அரசு பதவி அதிகாரம் பெற்று ஆலோசகராய் பெரும் சாதனை புரிவார்கள். ஞானம், அஷ்டமாசித்தி உபதேசம், புத்தி யுக்தி விவகார ஆலோசனை, ராஜசன்மானம், பட்டம் பதவி, பேர், புகழ், பிரபல்யம், நல்ல புத்தி, பேச்சுத் திறமை, ஞாபக சக்தி மந்திரம் ராஜதந்திரம் அரசியல் அறிவு மற்றும் சகல சாஸ்திரங்களையும் தருபவர் குருதேவராகும். ஸ்திரி ஜாதகத்தில் கணவர் பாக்கியத்தை பிரதி பலிக்கும் கிரகம் குருவாகும். புருஷன் ஐஸ்வரியம் ஆயுள் அதிர்ஷ்டம் பெற்று உயர்வடைய பெண்களுக்கு குரு பலம் அவசியமாகும். நல்லவரன் வரவும், திருமணம் விரைவில் நடக்கவும் ஆண் பெண் விவாக காலத்தில் வியாழன் நோக்கு, குரு பலம் பார்ப்பது குறிப்பிடத் தக்கதாகும். எனவே எதற்கும் குரு கடாக்ஷம் அவசியமாகும்.

பெரும் பலன் தரும் குரு தேவர் பாவிகளான ராகு கேது சனியுடன் கூடுவதும் 6, 8, 12ல் மறைவதும் நீச்ச அஸ்தமனமாவதும் நல்லதல்ல. கொடிய பலனைக் கொடுப்பார். குரு பாவிகளுடன் கூடி கெட்ட இடத்தில் இருந்தால் குரு சண்டாள யோகமாகும். குரு கடாக்ஷம் கிடைக்காது. மதப்பற்று தெய்வபக்தி இருக்காது. கல்வி கலை ஞானம் தொழில் வேலை பிரசித்தி விருத்தியில்லாமல் வீணாய் போக நேரும். கடன் கஷ்டம் விரயம் விரோதம் வந்து பாரினில் படக்கூடாத அவஸ்தைக்கு ஆளாகி நானிலம் பழிக்கநிற்க நேரும். கோடீஸ்வரனாய் இருந்தாலும் குடத்தில் வைத்த விளக்காய் பிரகாசிப்பார்.

கர்ணன் ஜாதகத்தில் குரு மகரத்தில் நீச்சமடைந்து பாவிகளின் பார்வை படுவதால் குரு பலம் இல்லை. கர்ணன் அஸ்த்ர சாஸ்த்ர பிரயோகங்களில் முழுமையான பயிற்சியைப் பெற்றுராயினும் ஆபத்து காலத்தில் அவை சமயத்திற்கு அவனுக்கு உதவாத வண்ணம் குரு சாபம் ஏற்பட்டது என்று நூல்கள் கூறுகின்றன. ஆதலால் குரு பலம் இழந்தவர் துரதிர்ஷ்டசாலியாகின்றனர். எவ்வளவு கற்றிருந்தாலும் படித்திருந்தாலும் பிரகாசிக்க முடியாது. மனதில் இருப்பதைச் சொல்லவராது. மறதி உடையவராய் செயல்படுவார்கள்.

பொன்னவன் நீச்ச அஸ்தமனமாகிற்
றீயோர் வீட்டில் நிற்க திரவியங்கள்
இல்லான்.

ஒரு ஜாதகத்தில் பொன்னவன் என்னும் குரு நீச்சமாவதும் அஸ்தங்கமடைவதும் பாவிகள் வீட்டில் இருப்பதும் நல்லதல்ல. சுபபலனை சோபிக்க முடியாது. பொன்னவன் திண்ணமாய் பொருளில்லாதவனாய் செய்து விடுவார். குரு பலம் இல்லாதவர் ஸ்தாபனத்திலோ அலுவலகத்திலோ திறமையாய்ச் செயல்பட-முடியாது. பதவி உயர்வு இருக்காது. அடிமையாய் இருக்க நேரும். சொந்த தொழில் சுய சம்பாத்தியம் அமையாது. ஆனால் குரு கெட்டாலும் பாக்கியஸ்தானம் என்னும் 9மிடம் பலத்த ஜாதகர் பிரபலயோகமுடன் விளங்குகின்றனர். குருவின் காரக பலனை குருஸ்தானமான 9மிடம் தருவதால் 9மிடம் பலத்தவருக்கு குரு கடாக்ஷம் இயல்பாய் ஏற்பட்டு அதிர்ஷ்டசாலிகளாய் விளங்குகின்றனர்.

அறிவித்தேன் ஐந்துக்கு ஐந்
தோன்றுனும்
அப்பனே அப்பதிக்கு கோணந்
தன்னில்
தெரிவித்தேன் திரவியமும் காடியுண்டு
திடமானமனைகட்டி ஆளுவானும்
குறிவித்தேன் ஆலயமும் பழுது
பார்ப்பான்
கொற்றவனே ரஜித பாத்திரமும்
கொள்வான்.

குரு பலனுக்கு ஈடாக கொடுப்பது குரு ஸ்தானமான 9மிடமாகும். குரு கடாக்ஷம், குரு உபதேசம் குரு பக்தி பூஜை ஞான வித்தை அதிர்ஷ்டம் ஐஸ்வரியம் தபஸ் தான தருமம் ஆகியன தருவது 9மிடமாகும். ஐந்துக்கு ஐந்தாமிடம் 9ம் அதிபதி என்னும் குரு ஸ்தான அதிபர் 1, 5ல் இருப்பது யோகமாகும். பொன் பொருள் பூமி புதிய வீடு வாகனம் வித்தை தொழில் அதிர்ஷ்டம் ஏற்படும். ஆனால் 9ம் அதிபதி நின்ற ராசி அதிபர் கெடக்கூடாது. 5மிடம் என்பது புத்தி யுக்தி படிப்பால் ஆர்வம், பட்டப் படிப்பு விருது வித்தை அறிவு மூளை பலம் ஆகியன தருவது 5மிடமாகும். ஐந்து என்பது அறிவு ஸ்தானமாகிறது. அறிவு ஸ்தானம் 5க்கு 5மிடம் 9மிடம். 9க்கு 9மிடம் 5மிடம் கல்வி கலைஞானம் வளர 5க்கு 9மிட சம்மந்தம் ஏற்பட்டு குரு ஸ்தானமாகியது. 9ம் அதிபதி குருவாகி 9ல் இருப்பது வரபிரசாத மாகும். உபதேசம் வித்தை அதிர்ஷ்

திரு. S. பட்டாபிராமன்,
மன்னார்குடி.

## ஆலயங்களில் திருவிளக்கிடுவதால் பெறும் பயன்

"விளக்கினுர் பெற்ற இன்பம் மெழுக்கினல் பதிற்றியாகும்
துளக்கினன் மலர் தொடுத்தால் தூய விண்ணேறலாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதம் சொன்னுர்க்கு அடிகள்தாம் அருளுமாறே"

— அப்பர் அடிகள்.

இப்பாடலில், திருக்கோவிலைத் திரு அலகினுல் பெருக்கித் தூய்மைசெய்தவர்கள் பெறும் இன்பத்திற்குப்பத்து மடங்கு அதிகமாக இத்திருக்கோயிலை மெழுகியவர்கள் பெறுவர் என்றும், நன்மலர் தொடுத்துச் சார்த்திப் பூசித்தவர் மேலுலகம் பெறுவர் என்றும், திருக் கோவிலின்கண் திருவிளக்கு ஏற்றியவர்கள் ஞானம் பெறுவர் என் றும், இசைப் பாடல்களைப் பாடியவர்கள் பெறும் பேறு அளவில்லாதன என்றும் கூறியுள்ளார்.

## முப்புர தகனம் - திரிபுரம் எரித்தல் - திருமூலர் தரும் தத்துவ விளக்கம்

தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி ஆகிய அசுரர்கள் மூவ ரும் அதிசயமான பட்டணங்களில் வாழ்ந்து வந்தனர். அவர்களது கோட்டைகள் முறையே இரும்பு, வெள்ளி, பொன் ஆகிய உலோகங்க ளால் ஆக்கப்பட்டிருந்தன. அவை வானில் பறந்து செல்லும் ஆற்றல் உடையன, உலகினுக்குப் பெருந்துயர் விளைத்து வந்த அம்மூவரின் கோட்டைகளும் ஆயிரம் ஆண்டுகளுக்கொருமுறை ஒன்ருகச் சேரும். அப்போது ஒரே அம்பினுல் எய்தால் மட்டுமே அவற்றுடன் அசுரர் களும் அழிவர். இவ்வாறு வரம் பெற்றிருந்தனர் அசுரர்கள். தேவர் களின் வேண்டுகோளுக்கிணங்கி, இறைவன் பூமியைத் தேராகவும், சூரிய சந்திரர்களைச் சக்கரங்களாகவும், நால் வேதங்களையும் குதிரை களாகவும், பிரமனைத் தேரோட்டியாகவும், மேருவை வில்லாகவும், திரு மாலை அம்பாகவும், தூய அக்கினியை அம்பின் முனையாகவும் கொண்டு முப்புரங்களைத் தனது புன் சிரிப்பினுல் ஒன்று சேர்த்து அழித்தான் இறைவன். இது திரிபுரமெரித்த வரலாறு. இக்கதையின் உட் கருத்தை திருமூலர் தெளிவாக்குகிருர்.

முப்புரம் என்பது ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங் களின் செய்கைகளே ஆகும். பொன், வெள்ளி, இரும்பு ஆகியவற்ருல் ஆன கோட்டைகள் நமது உடலின் தோல், நிணம், எலும்பு ஆகியவை களே. இறைவன் பசுக்களின் மலங்களை அழித்தலே திரிபுரமெரித்த லாகும்.

"அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே"

— திருமூலர்.

திரு. கே. பாலசுப்பிரமணியன் B.A.,B.Ed.,
தச்சநல்லூர்.

டம் ஐஸ்வரியம் ராஜ பதவி வரும். 9ம் அதிபதி உச்சம் பெற்று கேந் திரத்தில் இருந்தால் ஞான மார்க்கம் பலிக்கும். குருவும் 9ம் அதிபதியும் கேந்திரத்தில் இருந்தால் வாழ்நாள் பூராவும் ஐஸ்வரியம் இருக்கும்.

5, 9க்கு காரகனை குரு தேவர் 5, 9ல் இருப்பது யோகமாகும். ஏனென்ருல் 5க்கும் 9க்கும் தொடர்பை ஏற்படுத்துகிருர். 5ல் குரு இருந்தால் 5ம் பார்வையால் 9மிடத்தை பார்ப்பார். 9ல் குரு இருந்தால் 9ம் பார்வையால் 5மிடத்தைப் பார்ப்பார். ஜாதகத்தில் யோகங்களை இயக்குவது 5, 9 திரி கோண ஸ்தானங்களாகும். திரிகோண ஸ்தானங்களின் 5, 9 பார்வை குரு வுக்குக் கிடைத்திருப்பதால் குரு யோக பலம் பெறுகிருர். 5, 9ல் குரு இருக்கும்போது 5, 9 பார்வையால் 5, 9ஐ இணைப்பதால் 5,9ல் குரு அமைந்த ஜாதகங்கள் குரு கடாக்ஷம் பெற்று அதிர்ஷ்டசாலிகளாய் விளங்குகின் றனர். குரு லக்கினத்தில் இருந்தால் திக்பலத்தை பெறுகிருர். திக்பலம் பெற்ற குரு லக்கினத்திலிருந்து 5, 9 மிடத்தை பார்ப்பதால் யோகம் தரு வார்.

உயிராகிய லக்கினம் ஜாதகத்தின் தலைமை ஸ்தானமாகும். 5மிடம் பூர்வ புண்ணியம் அறிவு அதிர்ஷ்ட ஸ்தான மாகும். 9மிடம் பாக்கியஸ்தான மாகும். ஒரு ஜாதகத்தில் சூப்பர் ஸ்தானங்கள் என்பது 1, 5, 9மிடங் களாகும். 1, 5, 9 முக்கியமான மூன்று இடங்களில் எங்கிருந்தாலும் குரு தேவர் தனது 5, 9 விசேஷ பார்வையால் மூன்று இடங்களையும் இணைத்து பலம் பெறச் செய்கிருர். 1, 5, 9 இடங்களை சம்மந்தம் பெறச் செய்யும் விசேஷ அமைப்பு குருவுக்கு மட்டும் கிடைத்திருப்பது அற்புத யோகமாகும். குருவைத் தவிர வேறு எந்த கிரகமும் 1, 5, 9ஐ இணைக்க முடியாது. இது குருவுக்குக் கிடைத்த பெரும் பேருகும். இதனுல்தான் குரு பார்த்தால் கோடி தோஷம் நீங் கும் என்று சொல்கிருர்கள். குரு பலம் பெரும் பலமாகும். 1, 5, 9 ஏதாவது ஒரு இடத்தில் குரு அமைய பெற்றவர்கள் எப்படியும் ஒரு காலத் தில் ஒகோ என்று உயர்ந்து விளங்கு கின்றனர். குரு பலம் பெற்ற ஜாத கம் வீண் போகாது. பிரபல யோக முடன் வாழ்வர்.

# காயத்ரீராமாயணம்

ஸ்ரீமத் வால்மீகி இராமாயணமானது (24,000) இருபத்து நான்காயிரம் சுலோகங்கள் கொண்டது ஆகும். இருபத்து நான்கு எழுத்துக்களை கொண்ட காயத்ரீ மஹா மந்திரத்தின் ஒவ்வோர் எழுத்தையும், ஒவ்வோர் ஆயிரம் முதல் சுலோகத்தின் முதல் எழுத்தாக அமைத்து, இராமாயணத்தை வால்மீகி பகவான் இயற்றியிருக்கிறார். அவ்விதம் அமைந்த 24 சுலோகங்களே காயத்ரீராமாயணம் எனப்படும். இதை தினமும் பாராயணம் செய்வதால் வால்மீகி இராமாயணத்தைப் பூர்த்தியாகப் பாராயணம் செய்த பலனும், காயத்ரீ மந்திரத்தை ஜபித்த பலனும் உண்டாகும்.

காயத்ரீராமாயண சுலோகம்

தபஸ் ஸ்வாத்யாய நிரதம் தபஸ்வீ வாக்விதாம் வரம் |
நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம்: ||

ஸ ஹத்வா ராக்ஷஸாந் ஸர்வாந் யஜ்ஞக்நாந் ரகுநந்தந: |
ரிஷிபி: பூஜித: ஸம்யக் யதேந்த்ரோ விஜயீ புரா ||

விஸ்வாமித்ர: ஸ தர்மாத்மா ச்ருத்வா ஜனகபாஷிதம் |
வத்ஸ ராம தநு: பச்ய இதி ராகவ மப்ரவீத் ||

துஷ்டாவாஸ்ய ததா வம்சம் ப்ரவிச்ய ஸ விஸாம்பதே: |
சயனீயம் நரேந்த்ரஸ்ய ததாஸாத்ய வ்யதிஷ்ட்டத ||

வநவாஸம் ஹி ஸங்க்யாய வாஸாம்ஸ்யாபரணாநி ச |
பர்த்தார மநுகச்சந்த்யை ஸீதாயை ச்வசுரோ ததௌ ||

ராஜா ஸத்யம் ச தர்மம் ச ராஜா குலவதாம் குலம் |
ராஜா மாதா பிதா சைவ ராஜா ஹிதகரோ நருணாம் ||

நிரீக்ஷ்ய ஸுமுஹூர்த்தம் து ததர்ச பரதோ குரும் |
உடஜே ராமமாஸீநம் ஜடாவல்கல தாரிணம் ||

யதி புத்தி:க்ருதா த்ரஷ்டும் அகஸ்த்யம் தம் மஹாமுனிம் |
அத்யைவ கமநே புத்திம் ரோசயஸ்வ மஹாயச: ||

பரதஸ்யார்ய புத்ரஸ்ய ஸ்வஸ்ரூணாம் மம ச ப்ரபோ |
ம்ருகரூபமிதம் வ்யக்தம் விஸ்மயம் ஜநயிஷ்யதி |

கச்ச சீக்ரமிதோ ராம ஸுக்ரீவம் தம் மஹாபலம் |
வயஸ்யம் தம் குரு க்ஷிப்ரம் இதோ கத்வாத்ய ராகவ ||

தேசகாலௌ ப்ரதீக்ஷஸ்வ க்ஷமமாண: ப்ரியாப்ரியே |
ஸுகதுக்கஸஹ: காலே ஸுக்ரீவ வசகோ பவ ||

வந்த்யாஸ்தே து தபஸ்ஸித்தா: தபஸா வீதகல்மஷா: |
ப்ரஷ்டவ்யா சாபி ஸீதாயா: ப்ரவ்ருத்திர் விநயாந்விதை: ||

ஸ நிர்ஜித்ய புரீம் ஸ்ரேஷ்ட்டாம் லங்காம் தாம் காமரூபிணீம் |
விக்ரமேண மஹாதேஜா ஹனுமாந் கபிஸத்தம: ||

தந்யா தேவாஸ்ஸகந்தர்வா: ஸித்தாச்ச பரமர்ஷய: |
மம பச்யந்தி யே நாதம் ராமம் ராஜீவலோசனம் ||

மங்கலாபிமுகீ தஸ்ய ஸா ததாஸீந் மஹாகபே: |
உபதஸ்த்தே விசாலாக்ஷீ ப்ரயதா ஹவ்யவாஹநம் ||

ஹிதம் மஹார்த்தம் ம்ருது ஹேதுஸம்ஹிதம்
வ்யதீதகாலாயதி ஸம்ப்ரதி க்ஷமம் |
நிசம்ய தத்வாக்ய முபஸ்த்திதஜ்வர:
ப்ரஸங்வா நுத்தரமேத தப்ரவீத் ||

தர்மாத்மா ரக்ஷஸாம் ஸ்ரேஷ்ட: ஸம்ப்ராப்தோயம் விபீஷண:
லங்கைஸ்வர்யம் த்ருவம் ஸ்ரீமாநயம் ப்ராப்நோத்யகண்டகம் ||

யோ வஜ்ரபாதாசநி ஸந்நிபாதாந்
ந சுக்ஷுபே நாபி சசால ராஜா |
ஸ ராமபாணாபிஹதோ ப்ருசார்த்த:
சசால சாபம் ஸ முமோச வீர: ||

யஸ்ய விக்ரமமாஸாத்ய ராக்ஷஸா நிதநம் கதா: |
தம் மந்யே ராகவம் வீரம் நாராயண மநாமயம் ||

ந தே தத்ருசிரே ராமம் தஹந்த மரிவாஹிநீம் |
மோஹிதா: பரமா ஸ்த்ரேண காந்தர்வேண மஹாத்மநா ||

ப்ரணம்ய தேவதாப்யஸ்ச ப்ராஹ்மணேப்யஸ்ச மைதிலீ |
பத்தாஞ்ஜலிபுடா சேதமுவாசாக்நிஸமீபத: ||

சலநாத் பர்வதேந்த்ரஸ்ய கணா தேவாச்ச கம்பிதா: |
சசால பார்வதீ சாபி ததாஸ்லிஷ்டா மஹேஸ்வரம் ||

தாரா: புத்ரா புரம் ராஷ்ட்ரம் போகாச்சாதந போஜனம் |
ஸர்வ மேவாவிபக்தம் நோ பவிஷ்யதி ஹரீச்வர ||

யாமேவ ராத்ரிம் ஸத்ருக்ன: பர்ணசாலா முபாவிசத் |
தாமேவ ராத்ரிம் ஸீதாபி ப்ரஸூதா தாரகத்வயம் ||

பலச்ருதி

*இதம் ராமாயணம் க்ருத்ஸ்நம் காயத்ரீ பீஜஸம்யுதம் |
த்ரிஸந்த்யம் ய: படேந்நித்யம் ஸர்வபாபை: ப்ரமுச்யதே ||

தொகுப்பு:

என். சுப்பிரமணியன்-ஒரத்தநாடு.

பகவான் தன்னிடம் பக்தியுடன் கூடிய அசைக்க முடியாத நம்பிக்கை வைப்பவனுக்கு தன் கருணையைப் பொழிவதற்குத் தயங்குவதில்லை. மாறாக எவ்வளவு கற்றும், பகுத்தறிவை வளர்த்தும் தன்னிடம் பூரண நம்பிக்கை இல்லாதவன் மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்புச் சுழற்சியில் சிக்கிக் கொண்டு உழல்கிறான் என்கிறது கண்ணனின் கீதை.

மேற்கூறிய கருத்தை ஒரு புராண வரலாறு விவரிப்பதைப் பார்ப்போம்.

ஒரு முறை நாராயணனிடம் மாறாத பக்தி கொண்ட நாரதமுனி வைகுண்டத்திற்கு பகவானின் தரிசனத்திற்குச் செல்லும் வழியில் மிகவும் படித்த ஓர் பிராமணப் பண்டிதரைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. பண்டிதரோ அவரை வணங்கி அவரிடம் ஓர் வேண்டுகோள் விடுத்தார்.

# நம்பிக்கை

அதாவது வைகுண்டவாசியிடம் அப்பிராமணருக்கு எப்பொழுது மோட்சப் பதவி கிடைக்கும் என்று அறிந்து வருமாறு கேட்டுக்கொண்டார். நாரதரும் தான் சென்று அவர் விரும்பியதை அறிந்து வருவதாகக் கூறிச் சென்றார். மேற்கொண்டு செல்லும் வழியில் நாரதர் ஓர் செருப்புத் தைக்கும் தொழிலாளியைக் காண நேரிட்டது. அத்தொழிலாளி மிக்க பணிவுடன் தனக்கு மோட்சப் பதவி அதாவது பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை-எப்பொழுது கிடைக்கும் என்று அறிந்து வருமாறு கேட்டுக்கொண்டான். நாரதரும் புன்னகையுடன் தான் அறிந்து வந்து சொல்வதாக வாக்களித்தார்.

வைகுண்டத்தை அடைந்த நாரதரும் பகவானிடம் மேற்கண்ட இருவரது விருப்பங்களையும் தெரிவித்து பகவானின் பதிலுக்குக் காத்திருந்தார். ஒரு கணம் கண்ணை மூடிய பகவான் அவரிடம் "நீர் பார்த்த செருப்புத் தைக்கும் தொழிலாளி அவனது இந்தப் பிறவி முடிந்த உடன் என்னிடம் வந்து சேர்வான்" என்றும், "பிராமணப் பண்டிதர் இன்னும் பல பிறவி எடுக்க வேண்டி இருக்கும் என்றும் எப்பொழுது என்னிடம் வருவார் என்று கூற இயலாது" என்றும் கூறி விட்டார். மேற்கண்ட பதில் நாரதமுனிக்கு மிகவும் ஆச்சரியத்தை அளித்தது. பகவானின் திருவாக்கில் உள்ள இரகசியத்தை அறிய ஆவலுற்றார். பகவானே ஓர் புன்னகையுடன் "நாரதரே எனது வாக்கின் உண்மை உமக்கு தானே விளங்கும். நீர் மேற்கண்ட மனிதர்களைச் சந்திக்கும் போது வைகுண்டத்தில் நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்று கேட்பார்கள். அதற்கு பகவான் ஓர் ஊசியின் துவாரத்தில் ஒரு யானையை நுழைத்துக்கொண்டு இருந்தார் என்று சொல்லுவீராக" என்றார்.

நாரதரும் விடைபெற்றுக் கொண்டு பூலோகத்தில் பிராமணப் பண்டிதரைச் சந்தித்தார். பண்டிதரோ மிக்க ஆவலுடன் நாராயணன் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று கேட்கவும் நாரதரும் நாராயணன் ஊசித் துவாரத்தில் யானையை நுழைத்துக் கொண்டிருப்பதாகக் கூறினார். பண்டிதரோ உடனே "உங்களது அர்த்தமற்ற கூற்றை என்னால் நம்ப முடியவில்லை" என்றார். உடனே நாரதருக்கு நாராயணன் கூறிய உண்மை விளங்கியது. அதாவது பண்டிதருக்கும் இன்னும் பூரண நம்பிக்கை வரவில்லை. அவருக்கு வைகுண்டப் பதவி கிடைப்பது அரிது. செருப்புத் தைக்கும் தொழிலாளியைச் சந்தித்த நாரதர் மேற்கண்ட விபரத்தை அவனிடம் கூறவும் அவன் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் மல்கி "என் அப்பன் எல்லாம் வல்லவன் அவன் எதையும் செய்வான்" என்று கூறிப் பக்திப் பரவசமானான். நாரதரோ அவனிடம் "அப்பா ஊசித் துவாரத்தில் பகவான் யானையை நுழைப்பதை நீ நம்புகிறாயா?" என்று வினவினர். அதற்கு அவன் "ஆம் நம்புகிறேன்" என்று பதிலளித்தான். நாரதரோ "எவ்வாறு?" என்று கேட்டார். அதற்கு அவன் சற்றும் தயங்காமல் "நான் இங்கு அமர்ந்திருக்கும் நிழல் கொடுக்கும் ஆலமரம் மிகப் பெரியது. இதிலிருக்கும் சிறு பழங்கள் மிகச் சிறிய விதைகளை கொண்டிருக்கிறது. இச்சிறு விதைகள் மூலம் இம்மாபெரும் ஆலமரம் உண்டாகிறது. அதாவது இம்மாபெரும் ஆலமரம் இச்சிறிய விதைக்குள் அடங்கியிருக்கிறது. ஆகவே பகவானின் படைப்பில் உள்ள அதிசயம் எண்ணிப் பார்க்க முடியாத ஒன்று. அப்பேர்ப்பட்ட பகவானால் ஏன் ஓர் ஊசித் துவாரத்தில் ஓர் யானையை நுழைக்க முடியாது" என்று பதிலளித்தான். நாரதருக்கு அவனது பதில்கள் அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்தது.

பகவானிடம் எவன் பூரண நம்பிக்கை வைக்கிறானோ அவனே அவனை அடைய முடியும் என்று தெரிந்து கொண்டார்.

ஆகவே கலியுகத்தில் பரிபூரண நாம சங்கீர்த்தனமும், நம்பிக்கையும் தான் நமக்கு வழிகாட்டி.

பாரதியும் "பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்" என்றார்.

*

திரு. கஸ்தூரி ரங்கன்—சிவகங்கை.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

